ஹேதுவான எவ்வகையாகாரம் எந்த ஸ்திதியில் உள்ளே தங்கினாலும் அது மலச்சிக்கலேயாம். குடல் சுத்தமாயிருந்தால் உட்கருவிகளில் வியாதி பற்றாது. குடல் அசுத்தமாயிருந்தால் எல்லா வியாதிகளும் பற்றுவதற்கு ஹேதுவுண்டாகும். ஆகையால் ஆண் பெண், பாலர் விருத்தர் எல்லாரும் குடலில் மலச்சிக்கல் நேராதபடி வைத்துக் கொள்ளப் பழகவேண்டுமென்று எல்லா வைத்தியர்களும் வற்புறுத்திக் கூறுகிறார்கள். மலம் இறுகியாவது, சிறுகலாகவாவது போனாலும், வேறு எவ்விதமாகவாவது சிக்கியிருந்தாலும் அது மலச்சிக்கலேயாம். குடலில் அசுத்தம் தங்கினால் அது ஸப்த தாதுக்களையும் பாதிக்கும். மூளையில் (மஜ்ஜையின் சுத்தம் மூளை) தாக்கினால் அது மனதைக் கலைத்து அந்தக்கரணத்தையும் பாதிக்கும். மலப்பிரவிர்த்தி நன்றாக ஆகாவிட்டால் அன்றைக்கு லங்கணமிருப்பது பிரதமத்தில் பரம சாதனமாம். லங்கணம் என்றால் பட்டினி. காலாகாலத்தில் மலங்கழியப் பழகுவது அத்தியாவசியமாம். மருந்துகளைச் சாப்பிடுவதைவிட நித்திய சாக்கிரதையாயிருந்து, பழவகைகள், தேன், மோர், வெண்ணெய், ஷர்பத்துகள், போன்ற மலவிமோசனகாரிகளைப் புசித்து குடலை மலங்கழிக்கப் பழக்குவது உசிதமாம்.

தேஹத்தில் நீர் குறைந்தால் மலச்சிக்கலுண்டாகும். ஆதலால், தேன்கலந்தநீர், ஷர்பத்து, மோர், 'மார்மலேட்' இவைகளைச் சேர்த்துக் கொள்வது நலமென்று டாக்டர்கள் சொல்கிறார்கள். படுக்கப்போவதற்குச் சற்று முன்னும், எழுந்தவுடனும், வெந்நீர் அல்லது குளிர்ந்த ஜலம் தேகஸ்திதிக்குத் தக்கபடி சாப்பிடுவது மலப்பிரவிருத்தியை யுண்டுபண்ணும். "Concentrated Food" சத்துகளை மட்டுஞ் சேர்த்து அசத்துக்குறைந்த ஆகாரம் மலச்சிக்கலுக்குக் காரணமாகலாம். சத்தாகவிருப்பதால் அசத்துப் பாகம் மிஞ்சாது குறையும். அதனால் குடல் நெளிவதற்கு வேண்டிய சாதனம் குறையும். குடல் கீழ்நோக்கி நெளிதல் நிற்குமானால் அந்த வழக்கம் குன்றியதனால் மலமுள்ள காலத்திலும் குடல் அசையாமல் நிற்க ஹேதுவாகும். அதனால் மலச்சிக்கலுண்டாகும். தண்ணீர் தாராளமாக வுட்கொள்வது மலப்பிரவர்த்திக்கு அனுகூலமாம்.

இரண்டாவது, தேஹப்பயிர்ச்சியும் அப்பியாசமும் வேண்டும். நடமாட்டம் மிகுதியான எம்முயற்சியும் நல்லதாம். மலச்சிக்கல் வந்தபின் வைத்தியம் செய்து கொள்வதிலும் வாராமற் காப்பது மேல். மலம் சிக்கினால் வாதம் சீறி ஒடுங்கும். வாதம் ஒடுங்கினால் பலம் ஒடுங்கும். பித்தம் சீறும். இரத்தம் முறியும். மேகநீர் அல்லது விஷநீர் தங்கும். சிலேஷ்மங் கட்டிச் சேஷ்டைகள் பல செய்யும். அதனால் எல்லா வியாதிகளும் சம்பவிக்கும். வியாதிகளின் பேரையெல்லாம் சொல்லி சிறுவர் மனதைக் கலக்க இஷ்டமில்லை. சுகவழி காட்டுவது நம் கடமை. அசுகம் பற்றாதிருக்கப் பார்த்துக் கொள்வது சுகத்தைவிரும்பும் விவேகிகள் கடமை. ஆதியின்றி வியாதியில்லை. (ஆதியென்றால் சங்கல்பமூலம்.) ஆதிவைத்தியம் தெரியாது வியாதிவைத்தியம்செய்வது அனேகமாய் அநர்த்தத்தை விளைவிக்கும். வியாதிக்காரர்களுக்கு வைத்தியர்களிருக்கிறார்கள். சுகவழி நாடுவாருக்குச் சூத்திரமிருக்கிறது. சூத்திரமென்றால் சூக்ஷ்மமாயுள்ள புத்திமுதல் பிரஹ்மம் வரையில் அர்த்தங் கொள்ளும். அதைப்பற்றி விசாரிக்க விரும்புவோர் சாதன சதுஷ்டய ஸம்பன்னராய் குருவையடுத்து குருமுகமாய் விசாரம் செய்யவேண்டும். ஏனெனில் மலச்சிக்கு நீங்காதமனது உண்மையை உள்ளபடி யுணர்ந்து பற்றுவதருமை. குருமுகமாய் விசாரம் செய்தால் தேஹத்திரயங்களிலுமுள்ள மலச்சிக்கலைப்போக்கி நீர்மையும் நேர்மையுமுண்டாகச்செய்து பக்குவமறிந் துபதேசிப்பார். நீர்மை, நேர்மை யென்றதையே யோகமுறைபற்றி இயம, நியமமென்பார். நல்லெண்ணமும் நல்லொழுக்கமும் எல்லா யோகத்துக்கும் பிரதம காரணமாம்.

———:o:———

## Conditions of Health & Disease.

### How to live to 150.

### (Mr Edison's recipe.)

## (2) சௌக்கியாசௌக்கியசாதனங்கள்.

### 150-வயசிருக்க வழி.

(மிஸ்டர் எடிஸன் சொல்லும் உபாயம்.)

சுகவழி நாடுவோர் தேஹ பாவனையை விடவேண்டுமென்று நாம் சொல்கிறோம். மேற்றிசையிலுள்ள வித்யா விற்பன்னர் சிலர் ஆத்மா வென்பதைப்பற்றிய பேச்சையே யெடுக்காமல், இந்த தேஹத்தை ஒரு யந்திரம்போல் பாவித்து அதை சரியாக நடத்தி வந்தால் 150-வருஷ காலம் தேஹத்தோடு ஜீவித்திருக்கலாமென்று சொல்கிறார்கள். இப்படிச் சொல்கிறவர்களில் முக்கியமானவர் மிஸ்டர் தாமஸ் எடிஸன் என்பவர். சென்னையிலுள்ள ஷாப்புகளில் பாடும்யந்திரங்கள் விற்கப்படுகின்றனவே! அந்த யந்திரங்களைக் கண்டுபிடித்துச் செய்தவர் இவர் தான். இவருக்குக் காது நன்றாகக் கேட்காது. ஆனாலும் ஸ்வரத்தில் ஒரு அசைகூட விடாது சங்கீத ஸாஹித்தியங்களைப் பாடினபடி திருப்பிப்பாடும் யந்திரங்களை யிவர் நிர்மித்திருக்கிறார். இவர் மனுஷன் நித்தியாத்மன் என்பதைத் தான் நம்பவில்லை யென்கிறார்.

ஆனால் தேஹத்தை ஒரு யந்திரத்துக் கொப்பானதென்றும் அதை சரியாகப் பார்த்துக் கொண்டு வந்தால் 150 வருஷகால மிருக்கலாமென்றும் சொல்கிறார். இதனால் என்ன வெளியாகிறது. இவர் "தேஹம் நான்" என்கிற பாவனையை அறவிட்டொழித்தவரென் றேற்படுகிறதல்லவா!

மிஸ்டர் எடிஸனுக்கு இப்பொழுது வயது 64-ஆகிறது. இவர் 12-வயதில் வேலைசெய்ய ஆரம்பித்தார். அது முதல் விடாது மனத்தாலும் தேஹத்தாலும் உழைத்து வருகிறார். அவருடைய 64-வது வயதில் ஒரு நாளைக்கு 17-மணி நேரம் வேலை செய்கிறார். ஒரு தரம் 48-மணி நேரம் ஓய்வொழிவின்றி வேலை செய்தார். ஆனாலும் இவர் தேஹஅசௌக்கியத்தால் வருந்தினவரேயில்லை. தேகம் சௌக்கியமாயிருப்பதற்கு வழி யென்னவென்று இவரைக் கேட்டால், முதலாவது சரியான போஜனம் உட்கொள்ள வேண்டும்; இரண்டாவது சரியானபடி தூங்க வேண்டும்; மூன்றாவது சரியானபடி உடைகள் தரித்தல் வேண்டும். இந்த மூன்றிலும் சரியாக இருந்தால், மனிதன் இந்த தேஹத்தை 150-வருஷகாலம் வைத்துக் காப்பாற்றலாமென்கிறார். அவர் தானே அந்த 150 வருஷகாலம் ஜீவித்திருக்கப் போகிறதாகச் சொல்கிறார். இவர் ஆத்மா வொன்றுண்டென்றும் அதில் தான் நம்புவதாகவும் சொல்லாவிட்டாலும், தேஹம் தான் அல்லவென்றும், மனமும் தான் அல்லவென்றும், தேஹமும் மனமும் தான் உபயோகிக்கும் கருவிகளே யன்றி வேறல்லவென்றும் சொல்கிறார். அப்பொழுது தேஹமனோ தத்துவங்களுக்கு அந்நியமான விஞ்ஞானமயன் தானென்பது ஏற்படுகிறதல்லவா. இஃதேயல்ல: இவர் இதுவுங்கடந்தவர் என்பதற்கு ருஜு வேற்படுகின்றது.

சாதாரணமாக மனுஷர்கள் எதை யடக்கியாண்டாலும், பசி தாஹங்கள், காமக்குரோதங்களை யெல்லாம் அடக்கியாள வல்லவர்களானாலும், தூக்கம், ஸ்வப்னம் இவ்விரண்டையும் அடக்கியாள அவரால் முடியாது. ஏனெனில் சொப்பனமற்ற தூக்கம் ஆனந்த மயகோசத்தில் தான் அனுபவிக்கத் தக்கது. இவர் தலையணையில் தலை சாய்த்த 30 க்ஷணத்துக்கெல்லாம் நல்ல ஸுஷுப்தியில் இருப்பதாகக் கூறுகிறார். ஒரு நாளைக்கு 17-மணி நேரமுழைத்தாலும், 6-மணி நேரம் சொப்பனமென்பதில்லாத நல்ல தூக்கம் தூங்கிறதாகச்

சொல்கிருர். இவருடைய தேஹ சௌக்கியத்தின் இரகஸியம் சொப்பனமற்ற தூக்கத்தில் தானிருக்கிறது. அந்தத் தூக்கம் மனேசுத்தத்தால் தான் உண்டாகக்கூடும். மனே சுத்தத்தோடு தேஹ சுத்தமும் வேண்டும். எவனொருவன் தூங்கும் பொழுது சொப்பனம் காண்கிருனே, அவன் வயிற்றிலுள்ள ஆகாரம் அதிமதமான தென்று சொல்லல் வேண்டும் என்கிருர். இது உண்மையே! மனுஷன் மித போஜன முண்ண வேண்டுமானல் அவன் கர பாத்திரசாமி யாகவேண்டும். அதாவது வயிற்றுக்கு அளவு கையே! மிஸ்டர் எடிஸன் ஒரு கையளவு ஆகாரமே சாப்பிடுவதாகச் சொன்னர். சந்நியாஸ உபநிஷத்துக்களில் மனுஷனுக்கு மிதமான ஆஹாரம் இவ்வளவென்று நன்ருகச் சொல்லப் பட்டிருக்கிறது. உலகத்திலுள்ள மனுஷர்களெல்லாரும் மிதமிஞ்சி யுண்கிறவர்கள்: ஆதலால் தான் அற்பாயுளில் போகிருர்களென்பது இவருடைய சித்தாந்தம். இவரிடத்திலுள்ள ஒரே குற்றமென்ன வென்ருல், அது புகையிலே மெல்லுதலாம். அவருடைய மனைவி அது கூடாதென்று ஆக்ஷேபித்தாளாம். ஆனல் சீப் ஜஸ்டிஸ் (சிரேஷ்ட நியாயாதிபதி) அவர்களும் அந்த வழக்கம் அனுஸரிக்கிறவர் என்று தெரிந்ததும் புகையிலே போடுதல் கௌரவமான வழக்கந்தானென்று சும்மாவிருந்து விட்டாளாம். பெண் புத்தி யெங்கும் பேதைமையுடத்தே. மிதமிஞ்சின ஆகாரம் சாப்பிடுவதினல், தேஹத்திலே மலஜலச் சிக்கல்கள் ஜாஸ்தியாகி வாதபித்த சிலேஷ்ம நாடிகள் முறை பிறழ்ந்தோடுகின்றன. ஆதலால், இந்தக் கெட்ட வழக்கத்தை வெல்ல யத்தனிக்கிறவன், முதலில் தேஹசுத்தி செய்துகொள்ள வேண்டும். தேஹசுத்தி அங்க சுத்தியால் தான் சித்திக்க வேண்டும். அங்கசுத்திக்கு ஹிருதயசுத்தி அவசியம். ஆகையால் ஹிருதயசுத்தி வாய்த்த சற்சிஷன், அங்கசுத்தி தேஹசுத்திகள் செய்து கொண்டு, பிறகு ஆத்மசுத்தி தேட வேண்டும். ஆத்மசுத்தி யென்ருல் "தெளிந்த அறிவு" என்று அருத்தம்: வேறொன்று மில்லை. அறிவு தெளிந்தால், மாயையின் மயக்கம் நீங்கும். சுகநித்திரை சித்திக்கும். நீடித்துழைக்கலாம். நமது சித்தர்கள் அனுபவமும் இதுவே.—

"உடம்பினை யிழுக்கென்றிருந்தேன்.
உடம்பினுக்குள்ளே யுறுபொருள் கண்டேன்
உடம்பிலே யுத்தமன் கோயில்கொண்டானென்
னுடம்பினை யானிருந்தோம்பு கின்றேனே."

என்கிற ஒரு திருமந்திரத்திலே, தேஹத்தைக் காப்பாற்றும் வழியைத் திருமூலதேவர் சொல்லி விட்டார். இதன் விவரம் ஹடயோக சாதனங்கள் மூலமா யறியவேண்டும்.

———:-:———

உ

ஸ்ரீ சாவித்திரியை நமஃ

# விவேகசிந்தாமணி

# உபநிஷதர்த்த தீபிகை.

## 11. பாவனேபநிஷத்.*

(விவேகசிந்தாமணிக்கென்று பிரத்தியேகமாக எழுதப்பட்டது).

(யாவரும் இதை யெடுத்து அச்சிடக்கூடாது.)

———:-:———

அவதாரிகை:—ஸ்தூலம், சூக்ஷ்மம், பரம் எனப்படும் ஸ்ரீதிரிபுரசுந்தரியின் மூவுருவுக்கேற்ப, அவளுபாசனையும் காயிகம் (சரீரத்தாற் செய்யக்கூடியது), வாசிகம் (வாக்கால் செய்யக்கூடிய ஜபம்), மானதம் (மனதாற் செய்யத்தக்க பாவனை) என மூவிதப்படும். இவைகளை முறையே பஹிர்யாகம், அந்தர்

* இவ்வுபநிஷத்தை பாஸ்கரராயரால் செய்யப்பட்ட பாஷ்யத்தின் முக்கியாம்சங்களையும், அவரால் செய்யப்பட்ட (இதுவரையும் அச்சிட்டு வெளிவராத) பாவனேபநிஷத் பிரயோக விதியின் முக்கியாம்சங்களையும் சேர்த்து ஒருவாறு மொழிபெயர்த்திருக்கின்றது.

யாகம், பாவனை யெனக் கூறப்படும். இவைகளொவ்வொன்றிலும் மற்ற விரண்டினுடைய சம்பந்த மிருக்குமாயினும் அததன் பிராதான்னியத்தையும் அதிகாரம்சத்தையும் குறித்து காயிகம், மானதம், என்றிவ்வாறு சொல்லப்படும். முதலிரண்டும் திரிபுராதாபினீ உபநிஷத்தில் உபதேசிக்கப் பட்டிருக்கின்றன. அவைகளைக் காட்டிலும் ரஹஸ்யமானதும் காலசக்கிரத்திலடங்கிய ஸ்ரீசக்கிரத்தின் பாவனையென்று சொல்லப்படும் மூன்றாவது உபாஸனையை யோகிகளான ஜனங்களை அனுக்கிரகம் செய்வான் வேண்டி ஆதிவேத புருஷனானவர் ஆரம்பத்தில் சத்குருவின் பரரூபத்தை வர்ணிக்கின்றார். தந்திரங்களில் பாவனைகள் காதிமதம் கௌளமதம் என இருவகையாகச் சொல்லப்படும். இவ்வுபநிஷத்திற் சொல்லப்பட்ட பாவனைகள் காதிமதத்தை யனுசரித்தவை. இவ்வுபநிஷத்தில் அநேக பாட பேதங்களிருந்தாலும் காதிமதம் முதலிய தந்திரங்களையும் சுத்திரம் முதலிய சாஸ்திரங்களையும் ஒட்டிய பாடங்களை யனுசரித்தே பாஷ்யத்தைத் தானெழுதியிருப்பதாயும், ஆகையினாலேயே தன்னுடைய பிரயோக விதியில் பாஷ்யஞ் செய்யப்பட்ட உபநிஷத் சாகையில் காணாத பாடங்களையும் சேர்த்து அதற்கு வேண்டிய மற்ற அம்சங்களை யோகினீஹிருதயம், தந்திரராஜம், பிந்துசூத்திரம் முதலான கிரந்தங்களினின்றும் சேர்த்திருப்பதாகவும் பாஸ்கரராயர் சொல்லுகிறார்.

1. [உப] ஸ்ரீகுருவானவர் சர்வகாரண பூதமான சக்தி.

2. [உப] அதனால் (அச்சக்தியினுடைய) தேகம் (ஸ்வரூபம்) நவரந்திர ரூபமாகும்.

(குறிப்பு.) "குரு" வென்கிற பதத்தில் "கு" என்பது இருள் என்று பொருட்படும், "ரு" என்பது அவ்விருளைப் போக்கடிக்கின்றது என்று பொருளாகும், ஆகவே "குரு" வென்றால் இருளாகிய அஞ்ஞானத்தைப் போக்கும் வஸ்து, அதாவது விவேக மென்பது கருத்து. ஈசுவரானுக்கிரகத்தாலுண்டாகும் அவ்விவேகமே சர்வ சம்சயங்களையும் போக்கி, மந்திரங்களின் வீர்யத்தை பிரகாசிக்கச் செய்வதாலும், உண்மையாகிய பதார்த்தங்களை உபாசகனுடைய மனதில் தங்கும்படிச் செய்வதாலும் அதை விமர்சம் என்று சொல்லப்படும். அதுவே சர்வ பிரபஞ்சத்திற்கும் காரணமாகிய சக்தி. (விமர்சம் என்றால் பரியாலோசனை அல்லது விருத்தி.) குரு வென்கிற விவேகஞானமாகிய பூமிகையில் பிரஹ்மாநுசந்தானமாகிய விருத்தியிருப்பதாலும், அதுவே பூர்ணாஹந்தா ரூபமானதாலும் தேவியின் ஸ்வரூபத்தை பின் சொல்வதில் சதாநந்த பூர்ணமாகிய தன் ஆத்மாவே ஸ்ரீ பரதேவதையென்றும், சத், சித், ஆநந்தம், ஆகிய மூன்று தர்மங்களுமற்ற தர்மியாகிய சுத்த சம்வித்தே காமேசுவரர் என்றும் சொல்வதாலும், ஸ்ரீ பரதேவதைக்கு சதானந்தமாகிய உபாதியுண்டு என்று ஏற்படும். அவ் விருத்திரூபமாகிய உபாதியிருப்பதால்தான் தேவியின் வர்ணம் சிகப்பாகவும் காமேசுவரரின் வர்ணம் சுத்த ஸ்படிக ரூபமாகவும் வர்ணிக்கப்படும்: ஆகவே அசுத்தத் திரிபுடி நீங்கி சுத்தத் திரிபுடியாய் நின்ற அநுபவம் பரதேவதை. சுத்தத் திரிபுடியும் நீங்கிய விடம் ஸ்ரீகாமேசுவரர். (தேவியை விமர்சமென்பதுபோல் காமேசுவரரை பிரகாசமென்று சொல்வது சம்பிரதாயம்.)

தேகத்திலிருக்கும் நவ துவாரங்களும் அந்த விமர்ச சுவரூபமேயன்றி வேறில்லை. அவற்றில் இரண்டு சுரோத்திரமும் வாக்கும்—திவ்யௌகம்; இரண்டு கண்களும் உபஸ்தமும் சித்தௌகம்; இரண்டு மூக்குகள் பாயு இவை மானவௌகம் என்று சொல்வது சம்பிரதாயம். இவ்வொன்பது விபர்சங்களுக்கும் ஆதாரமானது சுஷும்னை நாடியே. சுஷும்னையின்

நவ துவாரமுள்ள மூலபாகத்தில் சுரோத்திரம் முதலான நாடிகள் எல்லாம் சேர்ந்திருப்பதாலும், சுஷும்னையின் சம்பந்த முடைய சித்சக்தியே அந்தந்த நாடிகளின் வழியாய் அதனதன் விஷயங்களைத் தோற்றச் செய்வதாலும் இவ்வொன்பது விமர்சங்களுக்கும் ஆதாரம் சுஷும்னா நாடியே. இவ்வொன்பதும் நல்லதைக் கிரகித்தல், தீமையானதை விடுத்தல், விஷயங்களை யுணர்தல் முதலிய வியவகாரமுடையதானவைகளாதலால் அவை விமர்ச மெனப்படும். இவ்வித விவேக விருத்தி சம்பந்தமான சித்சக்தியானது பிராணசக்தியின் இயக்கத்தோடு கூடின சுஷும்னையே. அதுவே விமர்சமயீயெனவும் சொல்லப்படும். இந்நாடிகள் ஒன்பதில் மூலாதாரத்தின் மத்திய திரிகோணத்தின் மத்தியிலிருந்து மேல்நோக்கி சிரசில் பிரஹ்மரந்திர பர்யந்தமும் மூக்கினின்றும் பனிரெண்டங்குலமும் போவதுமான சுஷும்னையும், கீழ்நோக்கி பாயுஇந்திரியம் வரையிற் போகும் அலம்புஸாவும் உண்டாகும். திரிகோணத்தின் நுனியிலிருந்து மற்றவை யுதிக்கும். குஹூ என்கிற நாடி துவஜம் வரைப்போகும். குஹூவின் இடது வலது பாகங்களில் விசுவோதரா, வாருணா என்ற இரண்டும் உண்டாகி விசுவோதரா வயிற்றிற்கும், வாருணா உடம்பு முழுதும் போகும். ஹஸ்திஜிஹ்வா, யசஸ்வினீ என்கிற இரண்டுநாடிகளும் இரண்டு பாதங்களின் கட்டை விரல்களுக்கும், இடை, பிங்கலைகள் மூக்கு நுனிவரையிலும், காந்தாரீ, பூஷா இரண்டும் கண்களிரண்டிற்கும், சங்கினீ, பயஸ்வினீ இரண்டும் இரண்டு காதுகளுக்கும், சரஸ்வதீ நாக்கு பரியந்தமும் போவனவாகும். இப்பதினாலு நாடிகளில் முன் சொல்லிய ஒன்பதின் வழியாய் அவைகளின் விஷயங்களை யறியும் விமர்சத்தின் (அதாவது உணர்ச்சியின்) சமஷ்டியையே ஸ்ரீகுருவோடு அபின்னமாகப் பாவனைசெய்ய வேண்டுமென்பது பொருள். ஸ்ரீகுருவின் ரூபமும் பலவிதமெனத் தந்திரங்களில் பிரதிபாதித்திருப்பதால் தேகரந்திரங்கள் ஒன்பதையும் நவ நாதர்களாகிய ஸ்ரீகுரு பரம்பரைக்கு அபேதமெனக் கொள்ளவும். ஸ்ரீகுருவின் ரூபம் திவ்யௌகம், சித்தௌகம், மானவௌகம், என மூவகையாகி, பிறகு ஒவ்வொன்றும் மும்மூன்றாகி, ஒன்பது வகையாகும். இவைகளை பிரயோக விதியில் பார்க்கலாம். சிலர் நாம் சொன்னபடி உணர்ச்சியை அபேத பாவனை செய்ய வேண்டுமென்று சொல்லாமல், சுரோத்திராதி இந்திரியங்களையும், நாடிகளையும் குருவுக்கு அபின்னமாகப் பாவிக்க வேண்டுமென்று அபிப்பிராயப்படுகிறார்கள்.

3. [உப] ஸ்ரீசக்கரம் நவசக்கிர ரூபமாம்.

[குறிப்பு] கடந்த உபநிஷத் வாக்கியத்தினின்றும் "தேஹம்' என்கிற வார்த்தை இங்கே தொடர்வதால் தன்னுடைய தேகத்தையே த்ரைலோக்ய மோஹனம் முதலான ஒன்பது * சக்கிரங்களின் சமஷ்டி ரூபமான ஸ்ரீசக்கரத்தோடு அபின்னமாய்ப் பாவிக்க வேண்டும். உள்ளடங்கிய ஒன்பது சக்கரங்களின் பிரவு பிறகு ஆவரண தேவதைகளைக் கூறுமிடங்களில் தெளிவாகும். தேகத்திலதனதின் ஸ்தானங்கள் ரஹஸ்யமானதால் அந்தந்த சாகைகளின் வேற்றுமையை யநுசரித்துத்தான் விவரிக்கப்பட்டிருக்கும். ஆகையால்தான் நித்திபா ஷோடசிகார்ணவம் என்கிற கிரந்தத்தில் சொல்லியிருக்கின்றன, தந்திரராஜத்திற் சொல்லப்பட

* நவசக்கிரங்களாவன; (1) த்ரைலோக்ய மோஹனமாகிய சதுர சிரம் (2) சர்வாசாபரிபூரகமாகிய 16-தளங்கள் (3) சர்வசம்க்ஷோபணமாகிய 8-தளங்கள் (4) சர்வ சௌபாக்கிய தாயகமாகிய சதுர்தசாரம் 14-த்ரிகோணங்கள். (5) சர்வார்த்த சாதகம்: பஹிர்தசாரம்—வெளியிலிருக்கும் 10-திரிகோணங்கள். (6) சர்வாரக்ஷாகரம்: அந்தர்தசாரம்—உள்ளிருக்கும் 10-திரிகோணங்கள் (7) சர்வரோகஹரம்—8-திரிகோணங்கள் (8) சர்வசித்திப் பிரதாயகம்—மத்தியத்திரிகோணம் (9) சர்வானந்தமயம்—பிந்து சக்கரம். இவைகளை இத்துடன் சேர்த்திருக்கும் ஸ்ரீசக்கரப்படத்தில் பார்த்துக் கொள்க. (படம் பின்வரும்)

வில்லை. இவ்விஷயத்தையே பிந்து சூத்திரத்தின் வாக்கியத்தை அனுசரித்து பத்மபாதாசாரியரால் பின் வருமாறு சொல்லப்பட்டிருக்கின்றது:
" அபர சிவனால், அதாவது, தந்திரங்களைச் சொ
"ன்ன சிவனுக்கு வேறாகிய வேதபுருஷனால்
"வெவ்வேறு சாகைகளாய்ச் சொல்லப்பட்டிரு
"க்கும் ஸ்தானங்களை யறிகின்ற சக்தியுடைய
"குருவின் பிரசாதத்தால், யாதொன்றினு
"டைய பாவனையின் ரஹஸ்யம் அறியப்பட்
"டிருக்கின்றதோ, அப்படிக்கொத்த தேகரூப
"மாகிய ஸ்ரீசக்கரம் அபரோக்ஷ சாக்ஷாத்காரத்
"தின் உபாயங்களில் ரகசியத்தைக் குறித்து
"உபஹ்வரமா யிருக்கின்றது."

4. [உப] வாராஹீ(தேவதை) பிதாரூபமானவள். குருகுல்லாவளீதேவதை மாதா.

5. [உப] புருஷார்த்தங்கள் சமுத்திரங்கள்.

(குறிப்பு) தன்தேகம் இந்திரியம் புத்தி இவைகளில் எலும்பு முதலான பிதாவின் அம்சங்களை வாராஹீ தேவதைக்கு அபின்னமாகவும், மாம்சம் முதலிய தாயின் அம்சங்களை குருகுல்லாவளி யென்கிற பலிதேவதைக்கு அபின்னமாகவும் பாவிக்க வேண்டும். வாராஹீ என்கிற தேவதை ஸ்திரீரூபமான போதிலும், முகம் புருஷரூபமானதால் அதை பிதாவாக பாவிக்கக் கூடும்.*

மேற்கு முதல் வடக்குவரை யுள்ள† திக்குகளிலுள்ள இக்ஷு (கரும்புரசம்), சுரா (சாராயம்), கிருதம் (நெய்), க்ஷீரம் (பால்), இந்நான்கு சமுத்திரங்களும் முறையே தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் (அறம், பொருள், இன்பம், வீடு) என்கிற நான்கு புருஷார்த்தங்களெனப் பாவிக்க வேண்டும்.

6. [உப] தேகம் நவரத்னத்வீபம்.

7. [உப] (அவை) துவக்கு முதலிய ஏழு தாதுக்களும் ரோமமும்.

* See footnote under ரசம்.

† மேற்கு, தெற்கு, கிழக்கு, வடக்கு.

8. [உப] ஸங்கல்பங்களை கல்பகவிருக்ஷங்கள்; தேஜஸு கல்பகத்தோட்டம்.

(குறிப்பு) துவக்கு முதல் ஏழுதாதுக்கள், (அதாவது, துவக்கைத் தவிர ஏழுதாதுக்கள்):— (ரசம்,)† மாம்சம், ரோமம், (துவக்கு சரீரத்தின் தோல்), ரக்தம், சுக்கிலம், மஜ்ஜை, அஸ்தி, மேதஸ் * இவை முறையே புஷ்பராகம், நீலம், வைடூர்யம், பவழம், முத்து, மரகதம், வஜ்ரம் கோமேதகம், பத்மராகம் முதலிய நவரத்தினமயமாகிய கண்டங்கள்; மேற்கு முதல் நிருருதி (தென்மேற்கு) வரையுள்ள திக்குகளிலுள்ளனவாக பாவிக்க வேண்டும். [பத்மராகத்தை ரஸத்துக்கு ஒப்பிட்டு மத்தியஸ்தானமான அபிமானி ஸ்தலத்தில் வைத்துப்பார்க்கவும். வி-சி. ப-ர்.]

நவதாதுக்களும் காலசக்ரேசுவரீ முதலிய தேவதைகளுக்கு அபேதமெனச் சொல்லும்

† ரசம் அல்லது ஓஜஸ் என்பது ஸப்ததாதுக்களின் சாரமாகிய ஓர்தாது. அது தேகத்திற்கு பலத்தையும் புஷ்டியையும் கொடுப்பதென்றும், வெண்ணிறமானதென்றும், கபரூபமானதென்றும், சரீரத்திலெங்கும் வியாபித்திருப்பதென்றும் வைத்திய சாஸ்திரங்கள் சொல்லும்.

* துவக்கு, ரத்தம், மாம்சம், மேதஸ் அஸ்தி என்கிற இவ்வைந்து தாதுக்களும் சக்தியம்சமென்றும், மஜ்ஜை, சுக்லம், பிராணன், ஜீவன் (அதாவது ஓஜஸ்) இவைகள் சிவாம்சமென்றும், பிண்டாண்டத்தைப்போல பிரஹ்மாண்டத்திலும் பஞ்சபூதங்கள் சக்தியம்சமென்றும், மாயை, சுத்தவித்யை, மஹேசன், சதாசிவன் என்கிற நாலு தத்துவங்களும் சிவனுடைய அம்சமென்றும், இவ்வொன்பது தத்துவங்களில் சகல தத்துவங்களு மடங்குமென்றும், ஆகவே சகல ஜகத்தும் சிவசக்தி ஸ்வரூபமென்றும் சொல்லும் காமிகாகம வாக்கியத்தை லக்ஷ்மீதரர் ஸௌந்தரியலஹரீ வியாக்கியானத்தில் மேற்கோளாக எடுத்துக்காட்டி யிருக்கிறார்.

* [இங்கே துவக்கைச் சேர்த்தும் எட்டுத்தான் கணக்காகிறது. இவற்றின் சஷ்மடி ரஸமான 'பிந்து' வையும் சேர்த்துக் கொண்டால் 9-ஆகும். ஔவை குறள் பார்க்கவும். ஔவையார் ரோமத்தைத்தள்ளி ஏழுதாதுக்கள் சொல்லியிருக்கிறார். பிந்து, ஓஜஸ், ஜீவன் இம்மூன்றும் ஒரு அர்த்தத்தில் உபயோகித்திருப்பதாகக் கொள்ளல்தகும். வி-சி. ப-ர்.]

வேறுசாகையில் பிரதிபாதிக்கப்படும் பாவனையையும் கிரஹித்துக் கொள்ளவேண்டியதே. அதன் பிரகாரத்தை பிரயோகவிதியில் பார்க்கவும்.

மனதிலுண்டாகும் சங்கல்ப விசேஷங்களே சந்தானம், ஹரிசந்தானம், மந்தாரம், பாரிஜாதம் என்ற கல்பக விருக்ஷங்களாக பாவிக்க வேண்டும். இச்சங்கல்பங்களுக்கு ஆதாரமாகிய தேஜஸ் எனப்படும் மனமே கல்பகத்தோட்டம். "மனமே ஜ்யோதி" (தைத்திரிய சம்ஹிதை 1-5-3) எனச் சுருதி உரை சொல்வதால் இங்கே தேஜஸ் என்பது சங்கல்ப விகல்பாத்மகமான மனதைக்குறிக்கும்.

மனோசங்கல்பமுதயமானபிறகுதான் ஓர் தொழிலில் பிரவிர்த்தி ஏற்பட்டு நினைத்த காரியத்தைச் சித்தித்துக் கொள்வதால் சங்கல்பங்களை கல்பகவிருக்ஷங்களாக பாவனை செய்யும்படிச் சொல்லப்பட்டது.

லளிதோபாக்யானம் முதலிய கிரந்தங்களில் காணப்படும் ஸ்ரீநகரத்தின் வர்ணனைக்கிணங்க இங்கு பாவனை சொல்லப் பட்டிருக்கின்றது. ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகளும் சௌந்தரிய லஹரியில் பின்வருமாறு வர்ணித்திருக்கின்றார்.

"ஆமுதின்கடல் வேவி செழுந்தரு
வாய்மணி பம்பிய தீவூடே
பாரக டம்படர் கானி லருங்கொடை
பாய்மணி மண்டப வீடேடே
கோரசி வன்பர மேசனுன் மஞ்சமொர்
கூர்பரி யங்கமெ னுமலே
சீரட ரும்பர ஞான முறுங்களி
தேவர ருந்துவர் பூமாதே."

9. [உப] ரஸனையால் (ஜிஹ்வேந்திரியத்தால், நாக்கினால்) அனுபவிக்கப்படும் மதுரம் (தித்திப்பு), ஆம்லம் (புளிப்பு), திக்தம் (கசப்பு), கடு (உரைப்பு), கஷாயம் (துவர்ப்பு), லவணம் (உப்பு) என்கிற (ஆறு) ரசங்கள் ஆறு ருதுக்களாம்.

(குறிப்பு):—ஷட்ருதுக்களும் ஸ்ரீநகரத்தின் பிராகாரங்களிற் சேர்ந்தனவாய் வர்ணிக்கப் பட்டிருப்பதால் அவைகளின் பாவனை இங்கு சொல்லப் பட்டிருக்கின்றது. ஷட் ருதுக்களாவன, வஸந்தம், கிரீஷ்மம், வர்ஷம், சரத், ஹேமந்தம், சிசிரம் என்பன.

"அநுபவிக்கப்படும் ரசங்கள்" என்று கூறுவதால் அவ்வாறு அநுபவிக்கும் காலத்திலே தான் பாவனைசெய்ய வேண்டும். இல்லாவிடின் கேவல ரஸங்கள் தேகத்தையன்றி வேறுவஸ்துக்களிலிருப்பதாலும், பாவனையோ பிரத்தியக்குவிருத்தி அப்பியாச ரூபமானதாலும், மனதினால் மற்ற வஸ்துக்களிலுள்ள ரசத்தை நிரோதம் செய்தல் கூடாமையாலும் வேறுவிதம் பொருள்கொள்ளில் மனதிற்கு பராக் (பஹிர்முக) விருத்தி யேற்படுமேயன்றி பாவனை யேற்படாது. இவ்விதமே மற்ற ரசங்களுக்கும் பொருள் சொல்லல்வேண்டும் தந்திர ராஜத்தில் "ஸ்வாதாரங்கள் ருதுக்கள்' என்று வாக்கியமிருக்கின்றது. சிலர் இதற்குப் பின் வருமாறு உரைசெய்கின்றார்கள்:—"ஸ்வாதாரம்" என்கிறபதம் டாகினி முதலான ஆறு யோகினிகளுக்கு ஆதாரமாகிய ஆறு ஆதார சக்கரங்களைக் குறிக்குமென்றும், சுஷும்னா நாடியானது இடைபிங்கலையென்கிற சந்திர சூர்யரூபமான நாடிகளின் சேர்க்கையில் அனுமானிக்கப்பட்ட (ஊகிக்கப்பட்ட) காலஸ்வரூபமானதால், அச்சுஷும்னையில் இருக்கும் ஆறாதாரங்களையும் ஆறு ருதுக்களாக பாவனைசெய்வது நியாயமென்றும்சொல்லுகிறார்கள். ஆனால் நாம் சொல்லியபாவனையே சுருதியனுபவ மிரண்டிற்கும் ஒத்திருப்பதால் சரியாகும். இங்கு ஓர் சங்கையுண்டாகலாம். "அனுபவிக்கப்படும்" என்று நிகழ்காலம் குறிக்கப்பட்டிருக்கின்றது. ஆனால் உபாசனாகாலத்திலோ ஷட்ரஸங்களின் அனுபவம் இருக்காதேயெனில், அக்காலத்தில் அவ்வனுபவத்தின் ஸம்ஸ்காரங்கள் உளவாதலால்

அச்சம்ஸ்காரங்களோடு ஷட்ருதுக்களையும் அபேதமாகக் கொள்ளலாம். "ஸ்வாதாரம்" என்பதில் "ஸ்வ" என்கிறது ஆத்மா. அவ்வாத்மா எவைகளுக்கு ஆதாரமோ அந்த ஷட்ரசங்களின் அனுபவத்தால் உண்டாகிய ஸம்ஸ்காரங்கள் என "ஸ்வாதாரம்" என்ற பதத்திற்குப் பொருளாகும். மேலும் டாகினீ முதலிய சக்திகள் அந்த வாக்கிய பரியந்தம் சொல்லப்படாததால் "ஸ்வ" என்பதற்கு டாகினீ முதலிய சக்திகள் என்று பொருட்படுத்தக் கூடாது. வைத்திய சாஸ்திரங்களில் ருதுக்களின் பேதப்படி ரசங்களையும் வியவஸ்தை செய்திருப்பதால் நாம் சொல்லிய அர்த்தமே பொருத்தமாகும்.

இப்பாவனைக்குள் ஸ்ரீநகரத்தில் வர்ணிக்கப்படும் யானைகள், குதிரைகள், வெளிமண்டபங்கள் இவைகளின் பாவனைகளும் அடங்கிவிடும்.

10. [உப] ஞானமே அர்க்கியம்: ஞேயம் (அறியப்படும் பொருள்கள்) ஹவிசு (ஹோமம் செய்யப்பட்ட பொருள்); ஞாதா (அறிகின்றவன்) ஹோதா (ஹோமம் செய்பவனுவன்); ஞாதரு—ஞான—ஞேயங்களின் அபேத பாவனையே ஸ்ரீசக்ரத்தின் பூஜை.

(குறிப்பு) ஞானமென்பது கடபடாதிகளையறியும் பரிச்சின்னமான அறிவு. அர்க்கியம் என்பது பூஜா சாதனங்களைக் குறிக்கும். ஞேயம் என்பது பாஹிய விஷயங்களைக் குறிக்கும். இது இதுவென்று தோற்றுவனவெல்லாம் ஹவிஸு என்று சுருதி சொல்லும். அவைகள் உபாஸ்ய தேவதைக்கு நைவேத்திய மென்பது கருத்து. சித்ரூபியாகிய பூஜிக்கப்படும் தேவதையோ பிரசித்தமானதால் இங்கு சொல்லவில்லை. "நான் என்கிற அஹந்தைக்கு விஷயமாகிய ஆத்மாவே பூஜிப்பவன். ஸ்வாத்ம சைதன்னியத்தினின்றும் வேறாகத் தோற்றும், ஞாதரு-ஞான-ஞேயங்களுக்கு வேற்றுமையுண்டு பண்ணும் நாம ரூபங்களை அனுசந்தானம் செய்யாமல் அவைகளைச் சின்மாத்திர ரூபமாய் பாவித்தல் இங்கு விதிக்கப்பட்டிருக்கின்றது. பூலோகத்தில் நைவேத்தியத்தின் பேரில் தெளிக்கும் விசேஷார்க்கியஜலம், நைவேத்தியம், பூஜகன், இவை மூன்றையும் தேவதைக்கு சமர்ப்பிப்பதான சம்பந்தமே பூஜை. அவ்வாறே இங்கும் ஞாதரு ஞானம், ஞேயம் மூன்றிற்கும் சித்துடன் தாதாத்மிய சம்பந்தம் சொல்லப்படும். ஆகிலும் உபநிஷத்தில் சொல்லி யிருப்பது அத்தாதாத்மியம் அனுபவத்தில் சித்திப்பதற்கு அனுகூலமான பாவனையையே பூஜையெனச் சொல்லப் பட்டிருக்கிறது.

(இன்னும் வரும்.)

---

## பாவநோபநிஷத் பிரயோகவிதி.

முன்பு மூலமந்திரத்தால் பிராணாயாமம் செய்து, ரிஷியாதி நியாசம்செய்து விவேக விருத்தியில் அவச்சின்னமாகிய சித்சக்தி ரூபமாகிய சுஷும்னை ஸ்வரூபமான ஸ்ரீ குருவுக்கு நமஸ்காரமென்று பிரஹ்ம ரந்திரத்தை தொட்டபின் பாவனையை யாரம்பம் செய்யவும்.

1. வலது சுரோத்திர (செவி) ரூபமான பயஸ்வினீநாடி யாத்மகமாகிய பிரகாசாநந்த ருக்கு நம:

2. இடது சுரோத்திர ரூபமான சங்கினீயாத்மகமான விமர்சானந்த நாதருக்கு நம:

3. ஜிஹ்வை (உருசி) ரூபமான சரஸ்வதியாத்மகமான ஆனந்தானந்த நாதருக்கு நம:

4. வலது நேத்திர ரூபமான பூஷாத்மகமான ஞானனந்த நாதருக்கு நம:

5. இடதுநேத்திர ரூபமான காந்தாரியாத்மகமான சத்தியானந்த நாதருக்கு நம:

6. துவஜ ரூபமான குஹாவாத்மகமான
பூர்ணானந்த நாதருக்கு நம:

7. வலதுநாசி ரூபமான பிங்களாத்மகமான
ஸ்வபாவானந்தநாதருக்கு நம:

8. இடதுநாசி ரூபமான இடாத்மகமான
பிரதிபானந்த நாதருக்கு நம:

9. பாயுரூபமான அலம்புஷாத்மகமாகிய
சுபகானந்த நாதருக்கு நம: என்று

அந்தந்த ஸ்தானங்களைத் தொடவேண்டும்.

நவசக்கர ரூபமாகிய ஸ்ரீசக்ராத்மகமான தேகத்திற்கு நம:

பிதிருரூபமான அஸ்திமுதலிய அவயவங்கள் வாராஹீ*

மாதா ரூபமான மாம்சம் முதலிய அவயவங்கள் குருகுல்லாவளி யென்ற பலிதேவதை.

இவ்விதம் நமஸ்கரித்து மூன்றுதடவை வியாபகம் செய்யவும்.

தேகத்தின் பின்பாக ரூபமான தர்மம் இக்ஷு சாகரம்.

தேகத்தின் தென் (வலது) பாகரூபமான அர்த்தம் சுரா (கள்ளு) சாகரம்.

தேகத்தின் முன்பாக ரூபமான காமம் கிருத (நெய்) சாகரம்.

தேகத்தின் வடக்கு (இடது) பாகரூபமான மோக்ஷம் க்ஷீர சாகரம்—

என்றிவ்விடங்களைத் தொடவும்.

| | |
|---|---|
| தேக ரூபமானது | நவரத்ன த்வீபம். |
| மாம்ஸம் | புஷ்பராக ரத்னம் |
| ரோமம் | நீல ரத்னம் |
| துவக்கு | வைடூர்ய ரத்னம் |

* இதற்குமேல் நாம் நமஸ்காரத்தைச்சேர்த்து எழுதவில்லை. ஒவ்வொரு பாவனையின் பின்னரும் சேர்த்துக்கொள்ள வேண்டும். இந்த பிரயோகவிதி பாவனோபநிஷத்திற் சொல்லிய பாவனைகளை எளிதிலப்பியசிக்குமாறு பாஸ்கரராயரால் செய்யப்பட்டது. இது இதுகாறும் அச்சாகி வெளியாகவில்லை. கையெழுத்துப் பிரதிகளினின்றும் மொழிபெயர்க்கப்பட்டிருக்கின்றது.

| | | |
|---|---|---|
| ரத்தம் | | பவழ ரத்னம். |
| மஜ்ஜை | | மரகத ரத்னம். |
| அஸ்தி | | வஜ்ஜிர ரத்னம். |
| சுக்லம் | | முத்து ரத்னம். |
| மேதஸ் | | கோமேதக ரத்னம். |
| ஓஜஸ் | | பத்மராக ரத்னம். |
| மாம்ஸத்தின் | அதிதேவதை | கால சக்ரேசுவரீ. |
| ரோமத்தின் | ,, | முத்திரா சக்ரேசுவரீ. |
| துவக்கின் | ,, | மாதிருகா * சக்ரேசுவரீ. |
| ரக்தத்தின் | ,, | ரத்ன சக்ரேசுவரீ. |
| மஜ்ஜையின் | ,, | குரு சக்ரேசுவரீ. |
| அஸ்தியின் | ,, | தத்துவ சக்ரேசுவரீ. |
| சுக்லத்தின் | ,, | தேச சக்ரேசுவரீ. |
| மேதவின் | ,, | கிரஹ சக்ரேசுவரீ. |
| ஓஜஸின் | ,, | மூர்த்தி சக்ரேசுவரீ. |

தேஜஸ் (சங்கல்ப விகல்ப ரூபமனம்.) கல்பகோத்தியானம் (கல்பகத்தோட்டம்).

| | | |
|---|---|---|
| மதுர ரசம் | (தித்திப்பு) | வஸந்த ருது. |
| ஆம்ல ,, | (புளிப்பு) | கிரீஷ்ம ,, |
| திக்த ,, | (கசப்பு) | வர்ஷ ,, |
| கடு ,, | (உரைப்பு) | சரத் ,, |
| கஷாய ,, | (துவர்ப்பு) | ஹேமந்த ,, |
| லவண ,, | (உவர்ப்பு) | சிசிர ,, |

| | |
|---|---|
| இந்திரியங்கள் | குதிரைகள். |
| இந்திரியங்களின் விஷயங்கள் | யானைகள். |
| கருணை | நீர்நிறைந்த பரிகை. (அதாவது சுற்றுமுள்ள நீர்ப்பாத்தி). |
| ஓஜஸின் கூட்டம் | மாணிக்கமண்டபம். |
| ஞானம் | விசேஷார்க்யம். |
| ஞேயம் | ஹவிஸ். |
| ஞாதா | ஸ்வாத்மா. |
| சித் | ஸ்ரீமஹாதிரிபுரசுந்தரி. |

இவ்வாறு அநுசந்தானம் செய்து மனதால் நமஸ்காரம் செய்யவும்.

* "மாதிருகை" யென்பது 51 அக்ஷரங்களைக் குறிக்கும்.

ஞாதுரு-ஞான-ஞேயங்களின் நாமரூபாம்சங்களின் லயாநுசந்தானத்தாலும் அவைகளை சின்மாத்திர ரூபமாய் பாவித்தலாலும் ஓர் க்ஷணம் இளைப்பாறி, பிறகு பதினைந்து திதிநித்தியா தேவதைகளை பஜனம் செய்யவும்.

இப்பதினைந்து நித்தியா தேவதைகளுக்கும் ஓர் நாளில் நடக்கும் 21,600 சுவாசங்களைப் பங்கிட்டு ஒரோர் தேவதையையும் 1440-சுவாசத்திற்கு அபின்னமாய் பாவனை செய்யவேண்டும்.

| திதியின்பேர். | தேவதையின்பேர் |
|---|---|
| (1) பிரதிபத் | காமேசுவரீ நித்யாதேவதை. |
| (2) த்விதீயை | பகமாலினீ நித்யாதேவதை. |
| (3) த்ரிதீயை | நித்தியக்லின்னா ,, |
| (4) சதுர்த்தீ | பேருண்டா ,, |
| (5) பஞ்சமீ | வஹ்நிவாஸினீ ,, |
| (6) ஷஷ்டி | மஹாவித்யேசுவரீ ,, |
| (7) சப்தமீ | சிவதூதி ,, |
| (8) அஷ்டமீ | துவரிதா ,, |
| (9) நவமீ | குலசுந்தரீ ,, |
| (10) தசமீ | நித்யா ,, |
| (11) ஏகாதசீ | நீலபதாகா ,, |
| (12) துவாதசீ | விஜயா ,, |
| (13) திரயோதசீ | சர்வமங்களா ,, |
| (14) சதுர்தசீ | ஜ்வாலாமாலினீ ,, |
| (15) பௌர்ணமீ | சித்ரா ,, |

சிலர் இப்பாவனைகளுடன் அந்தந்த தேவதையின் மந்திரங்களைச் சேர்ப்பதுமுண்டு.

(இன்னும் வரும்)

மு. சோ. நாராயணஸ்வாமி அய்யர்.
ஆர். விச்வேச்வர சாஸ்திரி உபாத்யாய:

——:-o-:——

## Easy Lessons in Economics.

### குடிவாழ்க்கை.

VI-பாடம். 1-பாகம்.

வேலையின்பயன் மாறுபடுதல்.

——:-:——

தேசபேதங்களினாலும், தொழில் செய்வோருடைய குணவித்தியாசங்களினாலும், அவர்களுடைய வேலையின் அளவின் வேறுபாடுகளினாலும், தேசத்திற்கு தேசம் திரவிய விஷயத்திலுள்ள ஆசை வித்தியாசப் படுவதாலும், தொழிலிற்கு வேண்டிய ஒருமைப்பாடும், முதலும் எல்லா தேசங்களிலும் ஒரேவிதமாயில்லாததினாலும், இவைபோன்ற மற்றகாரணங்களினாலும் வேலையின் பயனிலுண்டாகும் ஏற்றத் தாழ்வுகளை கவனிப்போம்.

தேசபேதம்.—வேலையினாலுண்டாகும் திரவியப் பெருக்கம் எங்கும் ஒரே அளவுடையதன்று. உழவுக்கு பூமி எங்கும் ஒரே தன்மையானதல்ல. நீர்வளமும் நிலவளமும் இடத்திற்கிடம் வேறுபடுகின்றது. சில நிலங்களுக்கு எருவும் தழையுமின்றி பயிர்விளையாது. சில நிலங்களுக்கு அவை அவ்வளவு அவசியமாயில்லை. சில தேசங்களில் பயிர்த் தொழிலுக்கும் மற்ற கைத்தொழிலுக்கும் வேண்டிய உலோகங்களும் மற்ற பல சாதனங்களும் ஏராளமாய் அதிகபணச் செலவின்றி கிடைக்கும். மற்ற சில விடங்களில் அவைகளை வெட்டியெடுத்துக் கைப்பற்றுவது கஷ்டமானதாயிருக்கும். இவைகள் சற்றும் கிடைக்காதவிடங்களுமுண்டு. பலதேசங்களில் நதிகளும் கடலின் கழிமுகங்களும் ஜனங்களுடைய சஞ்சாரத்திற்கும் செயற்கைப் பொருள்களை அந்நிய விடங்களுக்கு ஏற்றுமதி செய்வதற்கும் இயற்கையாகவே அமைந்த பாதைகளாய் உதவுகின்றன. இவ்விதவுதவி அற்பமுமில்லாத தேசங்

கள் அநேகம். மிருகங்களினுடைய கஷ்டமின்றி தொழில்களை நடத்தக்கூடிய இடங்களும், அவைகளினுடைய கஷ்டமே எப்பொழுது முள்ள வேறிடங்களும் நாமறியாததன்று. இருப்புப்பாதைகள் அமையப்பெற்ற நாடுகளில் போக்குவரத்து சௌகரியமும், அவையில்லாவிடங்களில் போக்குவரத்திலுள்ள கஷ்டமும் நாம் பிரத்தியக்ஷமாக வறிந்ததேயாகும்; இவ்விதமாக இயற்கையாகவே அற்பவேலைப் பாட்டினால் மனிதன் ஜீவிக்கும்படியான நாடுகளும், அல்லும் பகலும் கஷ்டப்பட்டு வேலை செய்தாலொழிய வயிறுறஉண்ணத்தகுந்த உணவுக்குச் சரியான வழிகாட்டாத வேறுசில நாடுகளும் இவ்வுலகத்தி லிருக்கின்றமையால், இயற்கை யமைப்பும் பொருள்களும் எங்கும் ஓரே தரத்ததென்று கூறமுடியவில்லை. இவ்விதமாக இயற்கையாக வமைந்த ஏற்றத்தாழ்வுகளிருப்பது வாஸ்தவமே யாயினும், அக்காரணத்தைக் கொண்டே அந்தந்த தேசத்தின் செல்வப் பெருக்கை மதிப்பிடலாமென்று எண்ணக்கூடாது.

பூமியும் இயற்கைப் பொருள்களும் எத்தேசத்தில் மனிதனுடைய சுகத்திற்குப் பொருந்த வில்லையோ அவ்விடங்களிலுள்ள மனிதர்களும் அவர்களுக்கு உபயோகப்படுகிற மிருகஜாதிகளும் தேகவலிமையிலும் மனோதைரியத்திலும் சிறந்தவர்களாயும் மேலான வைகளாயும் மதிக்கப்படுகிறது. பூமி மனிதர்களுடைய சிரமத்தை விசேஷமாய்க் கோராமல் அவனுக்கு வேண்டியவற்றை யளிக்குமாயின், அவன் தொழில் செய்வதில் பழக்கமும் வழக்கமுமற்று எப்பொழுதும் சுகத்தை நாடி, இயற்கையாய் அமையாத பலவிதப் பொருள்களைத் தேடியனுபவிக்க முயற்சி யற்றவர்களாய், எக்காலத்திலும் சோம்பேறிகளாய் மிருகங்களைப் போல் உண்டுறங்கி காலத்தை கழிப்பவராவார்கள்.

இந்தியாவில் வெகுசாய் பயிரிடுதல் கடினமானதன்று, உயர்ந்த விலைபெற்ற வஸ்திரங்களும், வாசஞ்செய்ய அதிக பணச் செலவாலாகிய கட்டடங்களும் விசேஷமாக வில்லாமலே காலங்கழிக்கலாம். ஐரோப்பாவில் உயிர் ஜீவித்திருக்க உணவு எவ்வளவு முக்கியமோ அவ்வளவு உடுப்பும் இருப்பிடமும் முக்கியமாகும். குளிர் காலத்தில் தகுந்த உடுப்பும் இருப்பு மில்லையாயின் மரணம் நிச்சயம். நமது தேசத்திலோ சாண்வயிற்றை நிரப்பப் பிடிசோறும் மானத்தைக் காப்பாற்ற முழத்துணியும் போதுமென்று சொல்வது வழக்கம். இங்கிலாந்து, பிரான்ஸ்முதலிய நாடுகளில் குளிரின் மிகுதியினால் உணவு அதிக சத்துள்ளதாயும் ஏராளமாயும் வேண்டி யிருப்பதன்றி, விலையேறப் பெற்ற ஆடையும் இருப்பிடமும, பனியால் உபாதி நேராதிருக்க கணப்பு நெருப்பும் ஜீவனத்திற்கு இன்றியமையாத சாதனங்களாகும். தவிர உழுது பயிர் செய்தல் இந்தியாவைப்போல் எளிதான காரியமல்ல. தண்ணீரைப் பாய்ச்சி மண்ணைப்புரட்டி விதையைத் தெளிப்பதினால் மாத்திரம் பயனுண்டாகாது. எருவின் வல்லமையினாலும் செய்கை வன்மையினாலுமே நிலமானது பயனை யளிக்கும்.

### VI பாடம். 2. பாகம்.

### வேலையின் அளவு.

தேச இயற்கை வேறுபாடுகளினால் இந்துக்களாகிய நாம் அற்பசந்தோஷ முள்ளவர்களாய் நீடித்துநின்று பெரும் காரியங்களை கைக்கொண்டு முடிக்கும் திறமையற்றவர்களாயும், தொழில்களிற் தகுந்த பயிற்சி இல்லாதவர்களாயும் சீர்திருத்த முறையை யறியாதவர்களாயும் ஒவ்வொரு விஷயத்திலும் குறைவடைந்தவர்களாயிருக்க, ஐரோப்பியர்களோ சரீரவல்லமையிலும் மனோதைரியத்திலும் சிறந்தவர்களாய்

னவ்வித இடையூறுகளேயும் நீக்கிக்கொள்ள சக்தி வாய்ந்தவர்களாய் அறிவில் மிக்கோர்களாயுமிருக்கின்றனர். ஆகையால் திரவியவிருத்திக்கு அந்தந்த தேசத்திலுள்ள இயற்கையமைப்பாயுள்ள உதவிகளின் ஏற்றத்தாழ்வுகளன்றி மனிதனுடைய செயலாலமைந்த ஏற்றக் குறைவுகள் விசேஷமாயுண்டென்பது விசிதமாகிறது. பவுத்தமதத்தை யனுசரிக்கிற திபெத் (Tibet) போன்ற நாடுகளில் பவுத்த சந்நியாசிகளுக்கு எளிதில் ஜீவனம் நடப்பது மல்லாமல் மரியாதையும் விசேஷமாயிருக்கிற படியால், வேலை செய்ய மனமில்லாதவர் களெல்லோரும் பவுத்த மதப் பிரசங்கிகளாய் மாறுவதால் வேலை செய்வோர் குறைந்து செல்வப் பெருக்கத்திற்கு வேண்டிய தொழில்களை நடத்த மனிதரின்றி ஜனங்கள் ஹீனஸ்திதியில் வருந்துவதுண்டு. அவ்விதமாக செல்வக் குறைவிற்கு ஆஸ்பதமான தொழிலாளிகள் பெருகி, மற்ற தொழிலாளிகள் குறைவாராயின் தேசச் செல்வம் குன்று மென்பதில் தடையில்லை.

உற்சவம், நோன்பு, பண்டிகை என்ற பல காரணங்களினுலும் வேலைசெய்யும் காலமும் குறையலாம். தினமொன்றுக்கு எவ்வளவு காலம் வேலைசெய்யலாகுமோ அவ்வளவு நேரம் வேலை செய்யாமல் வேலைக்காரன் வீண் பொழுது போக்கி செல்வ விருத்திக்கு தடை செய்யவும் கூடும். ஒவ்வொரு வேலைக்காரனும் இத்தனை வயதான பின்புதான் வேலைசெய்யத் தொடங்க வேண்டியது, இவ்வளவு வயதானதும் வேலையை ஒழிக்க வேண்டியது, என்பவை போன்ற கட்டுப் பாட்டினுல் வேலை செய்யும் காலம் குன்றலாம். இவைபோன்ற காரணங்களினுல் வேலையினளவு குறைந்து செல்வம் பெருகாமல் கீழ் நோக்கலாம்.

நம்முடைய தேசத்தில் தொழிலாளிகள் பல உற்சவங்களின் பொருட்டும் நோன்புகளின் பொருட்டும் வேலையை அடிக்கடி நிறுத்தி விடுகின்றன ரென்பது அறியாத தன்றே. முதலெடுப்பிலேயே வேலையைத் தொடங்க நல்ல நாள் கிடைக்க வேண்டுமென்று பல நாள் காக்கிருர்கள். வீடு, கொட்டகை கட்டுகிறவனும் வண்டி. செய்கிறவனும் கல், மரம் முதலிய சாமான்களுக்கு நல்ல நாள் பார்த்தே அச்சாரம் கொடுக்கின்ருன். அச்சாமான்களும் நல்ல நேரத்திலேயே வேலைசெய்யு மிடத்திற்கு வர வேண்டும். முகூர்த்தக்கால் போடுவதற்கும் ஜோதிஷர் அநுமதிவேண்டும். நிலைநாட்டவும் உத்திரம் போடவும், சக்கரத்திற்கு பட்டா போடவும் சக்கரத்தை வண்டியில் பூட்டவும் சுபமுகூர்த்தமின்றி காரியம் நடவாது. இவ்விதமாகக் காலம் வீணுவதுமன்றி, பிரதமை யென்றும் அமாவாசை யென்றும், சனிக்கிழமை யென்றும், விரதநாளென்றும் வேலை நிறுத்துவது வழக்கந்தானே. அவைகளால் வேலையின் அளவு குறையுமன்ருே.

T. C. வேங்கடரமணய்யர்.

---

## LALITAMBAL.

## லளிதாம்பாள் சரித்திரம்.

II.

"பார்வதி! குழந்தை பத்திரம்!"

"அடியே! குழந்தை குப்புவைக் கொண்டுவா! நான் அவளைப்பார்க்க வேண்டும். சீக்கிரம் வா!"

"அம்மா பார்வதி! அப்பா கூப்பிடுகிருர். குழந்தை குப்புவை யெடுத்துக் கொண்டு ஓடிவா!"

"இதோ வந்து விட்டேன்!"

இந்த வாக்கியங்கள் ஒன்றின் பின் ஒன்ருகப் பிறந்தன. பரை, பச்யந்தி, மத்யமை யென்னும் வாக்குகள் ஒன்றிலிருந்து ஒன்று பிறந்ததுபோல் இவ்வாக்கும் ஒன்றிலிருந்தொன்று பிறந்ததென்னலாம்.

முதல் வாக்கு அத்தியாவஸ்தையிலிருந்த கிருஷ்ண ஸ்வாமி ஐயருடைய வாக்கு ஸ்தானத்தில் பிறந்து அவரது நேத்திரங்களாலும் சைகைகளாலும் வெளியிடப்பட்டது, அவருடைய ஸ்திதியை யறிந்து அவரிடத்திலே கண்ணுங்கருத்து மாயிருந்த அவருடைய தர்மபத்நி அவர் குறிப்பறிந்து அவருடைய கருத்தைப் பக்கத்துக் கூடத்திலிருந்த அவர்களுடைய மூத்த பெண்ணுக்குத் தெரிவித்தாள்.

அவளும் வாய்திறந்து மூடுமுன் குழந்தை குப்புவை வாரியெடுத்துக் கொண்டு தாயாரிடம் ஓடிவந்தாள்.

பார்வதி குழந்தையும் கையுமாக வந்து நிற்கவும், கிருஷ்ணஸ்வாமி ஐயர் தம் கையை நீட்டிக் குழந்தையை வாங்கி மாரில் வைத்துக்கொண்டு அதை யுடம்பெல்லாம் தடவிக் கொடுத்து மாரோடணைத்துக் கட்டிக்கொண்டு உச்சி முகர்ந்து உவகைபூக்கத் தம் இருகண்களாலும் ஆநந்தபாஷ்பம் விட்டார். அப்பொழுது அவருடைய முகம் சூரியனைக்கண்ட தாமரை போல் மலர்ந்தது. முகத்தில் விசேஷமான களையொன்று தோன்றி கண்களின் வழியாய் பிரகாசித்தது. அவருடைய பத்நியார் தம் பர்த்தா முகத்திலுண்டான களையையும் கண்ணில் தோன்றிய ஒளியையும் பார்த்து சந்தோஷப்பட்டு, "இது ஒடுங்கின பிராணன் திரும்புங் குறியாக விருக்கிறது! தேவீ எனக்கு மாங்கல்ய பிச்சையளிக்க வேண்டுமென்று உள்ளமுருக அவள் ஹிருதயத்தில் பிரார்த்தித்து நின்றாள். அவர்கள் மூத்த பெண் பார்வதியும் பக்கத்தில் தானே நிற்கிறாள். அவளுக்குப் பின்னால் அழுதகண்ணும் சிந்தியமூக்குமாய் அவள் தங்கை வாலாம்பாள் நிற்கிறாள். அவள்தான் குழந்தை குப்புவின் தாயார். காட்டுவிண்ணூர் கோவில் வாமதேவ சாஸ்திரியின் தர்மபத்நி. அவளுக்கும் பின்னால் அவள் தங்கை "குஞ்சு" நிற்கிறாள். கிருஷ்ணஸ்வாமிஐயர் தலைப்பக்கத்தில் அவருடைய மூன்று குமாரர்களும் வரிசையாய் ஒருவர்பின் ஒருவராக நிற்கிறார்கள்.

எல்லாரும் திறந்த கண் மூடாமல் கிருஷ்ணஸ்வாமி ஐயர்மேல் வைத்த கண் வைத்தபடி நிற்கிறார்கள்.

கிருஷ்ணஸ்வாமி ஐயர், குழந்தையை உச்சிமுகர்ந்து உடம்பெல்லாம் தடவிக் கொடுத்து உளமகிழ்ந்தவராய்ச் சிறிதுநேரம் மௌனமாயிருந்தார். அந்த உள்ளே எல்லாம் நிஸ்சப்த மாயிருந்தது. ஊசி விழுந்தால் கேட்கும் போல் இருந்தது. கிருஷ்ணஸ்வாமி ஐயர் குழந்தையை மாரில் வைத்துக்கொண்டுதானே கண்ணை மூடிக்கொண்டு கடவுளைத் தியானம் செய்தார். எல்லாரும் ஈப்பாக்கு வைத்ததுபோல் அசைவற்று நின்றார்கள். கிருஷ்ணஸ்வாமி ஐயர் உதடு அசைந்தது. மெதுவாக அவரது கண்டஸ்வரம் த்வனிக்க லாயிற்று. எல்லாரும் உற்றுக் கேட்டார்கள் :—

"குசாம்சித விபம்சிகாம் குடிலகுந்தலா லங்கிருதாம்
குசேசய நிவாஸிநீம் குடிலசித்தவித்வேஷிணீம்॥
மதாருண விலோசநாம் மநஸிஜாரிஸம்மோஹிநீம்
மதங்க முநிகந்யகாம் மதுரபாஷிணீம்ஆச்ரயே॥"

என்று தேவியை வாயால் ஸ்தோத்திரம் செய்தார்.

"ஸ்குங்கும விலேபநாமளிகசும்பிகஸ்தூரிகாம்
ஸமந்தஹஸிதேக்ஷணாம் ஸசராபசாப பாசாங்குசாம்॥
அசேஷஜநமோஹிநீம் அருணமால்யபூஷாம்பராம்
ஜபாகுஸும பாஸுராம் ஜபவிதௌ ஸ்மராம்யம்பிகாம்॥"

என்று இன்னொரு ஸ்லோகம் சொல்லக் கேட்டார்கள். பிறகு மூச்சு அடங்கி விட்டது. ஆனால் முகத்தின்ஒளி மாறவில்லை. குழந்தையைப் பிடித்துக் கொண்டிருந்த கை நழுவவில்லை. எல்லாரும் திகைத்துப்போய் நின்றார்கள். ஆனால் ஒருவரும் ஆரவாரம் செய்யத் துணியவில்லை. ஏனெனில், அவர் தியானசமாதியிலிருந்தால் அதைக்கலைப்பது மஹாபாபமென்று அவர்கள் எல்லாருக்கும் தெரியும். இப்படி ஐந்து நிமிஷம் கழிந்தது. பத்து நிமிஷம் கழிந்தது. அவரையே கண் கொட்டாது பார்த்துக் கொண்டிருந்த அவர் பத்நியார் சித்திரப் பதுமைபோல் நின்றவள் நின்றபடி மூர்ச்சித்து நின்று விட்டாள். பக்கத்தில் நின்று கொண்டிருந்த பார்வதி, தாயார் கைசோர்வதைக் கண்டு அம்மாள் முகத்தைப் பார்த்தாள். திறந்தகண் மூடி விட்டது. "ஓஹோ! பகவானே! இதென்ன புதுமை." என்று உள்ளத்தில் உன்னி தன் தாயார் கால் சோர்ந்து விழுந்துவிடாதபடி அவளைத் தாங்கிக்கொள்ளத் தயாராய் நின்றாள்.

"பர்த்தாவுக்கேற்ற பதிவிரதை" யென்றால் அந்த அம்மாளுக்குத்தான் பொருந்தும். கணவன் எள்

ளென்று வாய்திறக்கு முன் எண்ணெயாக நிற்பாள். அப்படி யென்றால் என்ன? அவர் ஸ்தூலமான வார்த்தைகளால் தன் உள்ளக்குறிப்பை வெளியிடுமுன் அந்த அம்மாள் அவர் குறிப்பறிந்து பணிவிடை செய்வாள். "கொண்டான் குறிப்பறிவாள் பெண்டாட்டி" யாதலால், புருஷன் வாய்திறந்து சொல்லுமட்டும் காத்துக் கொண்டிருக்கிற பெண்பெண்டாட்டி என்ன பெண்டாட்டி! யென்று அந்தம்மாள் தனது நாட்டுப் பெண்களுக்கு அடிக்கடி புத்தி சொல்வாள். தன்னுடைய பெண்களையும் அப்படியே பழக்கி வந்தாள். பார்வதி மட்டும் தாயார் குணமறிந்து தகப்பனார் மணமறிந்து புத்திசாலியாய் நடந்துகொள்வாள். வாலாம்பாளுக்கு அப்பா சொன்னபடி கேட்கத் தெரியும், அவ்வளவுதான்; அகமுடையான், தெய்வம் எல்லாரும் அவளுக்கு அப்பாவுக்கு அப்புறந்தான். "குஞ்சு" விளையாட்டுப் புத்தியுடையவள். உல்லாசப் பிரியளாதலால், மனோல்லாஸமாயிருப்பாள். அவளுக்கு இன்னம் குடித்தனபாரம் தலையிலுறைக்கவில்லை யாதலால், குழந்தைமனதை வீண் கவலையினால் கெடுக்கக்கூடாது என்று சும்மாவிட்டு விட்டார்கள். பார்வதி குடித்தனப் பொறுப்பாய் எல்லாவற்றையும் பார்ப்பள். வாலாம்பாளுக்கு "அப்பா செல்லம்" என்று பட்டப்பேர்; அதையே சில சமயம் சொட்டுப் பேராகவும் உபயோகிப்பதுண்டு. குஞ்சு விளையாட்டுக் குழந்தையாகவே யிருந்தாள்.

சரி! பத்து நிமிஷம், பதினைந்து நிமிஷமாய் விட்டது. இன்னம் கிருஷ்ணஸ்வாமி ஐயர் கண் திறக்கவில்லை. மூத்த பிள்ளை சுந்தரம் பயந்து அவர் மூக்கில் கை வைத்துப் பார்த்தான். பார்வதி தன் தாயாரைப் பாதுகாத்துக் கொண்டு நின்றபடி 'அவரைத் தொடாதே' யென்று தன் தமயனைப் பார்த்து கண்ணைக்காட்டித் தலையை அசைத்தாள். சுந்தரமய்யர் திடுக்கிட்டுப் பின்வாங்கி விட்டார்.

பதினைந்து நிமிஷம். இருபது நிமிஷமாய் விட்டது. கூட விருந்தவர்களுக்கு சங்கடம் பொறுக்க முடியவில்லை. பார்வதிமட்டும் புத்தியும் பொறுப்புமாய் நிலைகுலையாமல் ஸ்தானம் தவறாமல் தன் தாயைத் தொடாமல் தானே அவளைப்பாதுகாத்த வண்ணம் நின்றுகொண்டிருந்தாள்.

இருபத்தியைந்து நிமிஷமும் ஆய்விட்டது. பார்வதி "பகவானே!" யென்று ஒரு பெருமூச்சு விட்டாள். சற்று நேரத்துக்கெல்லாம் கிருஷ்ணஸ்வாமி ஐயர் மூடின கண் திறந்து எல்லாரையும் தெளிவுறப் பார்த்தார். பார்வதிக்குக் கொஞ்சம் ஆயாஸம் தீர்ந்து தன் தாயார் முகத்தைப் பார்த்தாள். அந்தம்மாளும் அப்பொழுது தானே தூங்கின குழந்தைபோல் கண்விழித்து நின்றாள். "அதோ அப்பா உன்னைப் பார்க்கிறார் பார்!" என்று பார்வதி அவள் காதிலோத அவள் கண்ணை நன்றாக விழித்துக்கொண்டு கிருஷ்ணஸ்வாமி ஐயருக்குச் சிஷ்ருஷை செய்ய முன்போலத் தயாராகிநின்றாள்.

தன் தாயார் முகந்தெளியவும் பார்வதிக்குத் தலைப் பாரம் குறைந்தது. அவளும் இளங்கொடி போல் அவளைத் தழுவி நின்றாள்.

ருக்மணியம்மாள் கிருஷ்ணஸ்வாமி ஐயர் கண் சாடையை யறிந்து "அப்பா என்னவோ சொல்கிறார்: யாரைக் கூப்பிடுகிறார் என்று தெரியவில்லையே! சற்றுக் கவனித்துப்பார்!" என்று பார்வதி காதில்படச் சொல்லி விட்டு, தன் பர்த்தாவை அண்டினாள்.

கிருஷ்ணஸ்வாமி ஐயர் பார்வதி நின்ற விடத்திற் கண்ணைக்காட்டி யவளை யழைத்தார். அவருடைய தர்மபத்நி அவர்மேல் கண்ணுங் கருத்துமாய் இருந்தபடியே "அம்மா உன்னைத்தான் அப்பா கூப்பிடுகிறார்: கிட்டவந்து என்ன சொல்லப்போகிறாரோ, நன்றாகக் கவனித்துக்கேள்!" என்று மிருதுவசனமாய்ச் சொன்னாள்.

அதற்குள் பார்வதியும் ஸர்வோபசாரத்தோடும் நெருங்கி பயபக்தி நிறைந்த வுள்ளத்தோடு, அப்பா என்ன சொல்லப்போகிறார் என்று அவரிடத்தில் கண்ணுங் கருத்துமா யிருந்தாள்.

அவள் கிட்ட நெருங்கியதும் கிருஷ்ணஸ்வாமி ஐயர், தான் இதுகாறும் பத்திரமாகத் தானே வைத்துக் கொண்டிருந்த குழந்தையைத் தூக்கிப் பார்வதி யிடம் கொடுத்து, "அம்மா பார்வதி! இந்தா! இந்தக் குழந்தை யுன் பொறுப்பு: நான் இந்தச் செல்வத்தை யுன்னிடம் ஒப்புவித்துப் போகிறேன், நீ அதைப் பத்திரமாய்ப் பார்த்துக்கொள். மறந்து போகாதே! பத்திரம்! பத்திரம்!" என்று 'கண்கணார்' என்று கண்டத்துவனி கேட்க வாய்திறந்து மொழிந்தார். அந்த சப்தத்தைக் கேட்கவும் எல்லாரும் திகைத்துப் போனார்கள். ஏனென்றால் அது அத்தியாவஸ்தையி லிருப்பவருடைய ஸ்வரமாகக் கொஞ்சங் கூடத் தோற்றவில்லை. கண்டாமணியடி

த்தது போல் கணீர் என்று சப்தம் பிறந்தது. வாக்குகள்மூன்றும்பொருந்த வைகரி பிறந்தால் அப்படித் தானிருக்கு'மென்கிற யோகரகஸியம் அவர்களுக்குத் தெரியாது.

மார்க்கண்டன் யமனை வென்றதுபோல் அப்பா யமனை யடித்துத் துறத்தி விட்டார் போலிருக்கிறது என்று பார்வதி மட்டும் நினைத்தாள்.

அவருடைய பத்நியார் அந்த சப்தத்தைக் கேட்டதும் தன்னை யறியாமல் "தர்மராஜா! மாங்கிலியப்பிக்ஷை கேட்டேன்: மறுக்காதே! ஸாவித்திரியைப் போல் நானும் கூடவே வருவேன்! என் நாதருக்குச் சிஷ்ருஷை செய்ய நானும் கூடவே வருவேன்!" என்று தீரமாய்த் தனக்குள் சொல்லிக் கொண்டாள்.

கிருஷ்ணஸ்வாமி ஐயர் குழந்தை குப்புவைப் பெற்றதாயிடம் ஒப்புவியாமல் தன் மூத்த பெண்ணிடம் ஒப்புவித்து 'பத்திரம்! பத்திரம்!' என பத்திர புஷ்பத்தால் அர்ச்சனை செய்வதுபோல் உள்ளன்புக்குவந்த உண்மையான அர்ச்சனை செய்தபின், வாயைத் திறவாமல் தானே அழுதுகொண்டிருந்த வாலாம்பாளைப் பார்த்து, "அம்மா அழாதே பகவான் இருக்கிறார் உன்னைக் காப்பாற்ற" என்று திடஞ்சொல்லி விட்டுத் தன் பத்தினி முகத்தைப் பார்த்தார். அந்தம்மாள் 'நாதா' என்று திடுக்கிட்டுக் கூவினாள். "கட்டை உளுத்துப் போய்விட்டது. இனித்தாங்காது! தாமசிப்பதில் பிரயோசனமில்லை" யென்று சொன்னார். எல்லாரும் கோவென்று கதறினார்கள். கிருஷ்ணஸ்வாமி ஐயர் தம் இருகைகளாலும் காதைப் பொத்திக் கொண்டார். உடனே பார்வதி தன் அழுகையை யடக்கிக் கொண்டு "எல்லோரும் வாயை மூடுங்கள்! அப்பாவுக்கு சத்தம் பொறுக்க முடிய வில்லை." என்று குழந்தை குப்புவை யிடுப்பில் வைத்துக்கொண்டபடியே தன் வாயில் கையைவைத்தமர்த்திச் சைகை காட்டி யொரு நிமிஷத்தில் நிச்சப்த முண்டாகச் செய்துவிட்டாள்.

கிருஷ்ணஸ்வாமி ஐயர் தர்மபத்நி மட்டும் அவரை யணைத்துத் தழுவிக்கொண்டு அவர் கண்ணோடு கண் பொருந்தக் கண்ணொளி மங்குவதைப் பார்த்துக் கொண்டிருந்தாள். மற்றவர்களெல்லாரும் பொறுக்கக் கூடாத துக்கத்தைப் பொறுத்துக்கொண்டு அவர் திருமுக மண்டலத்தைப் பார்த்தவண்ணமாயிருந்தார்கள்.

கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு மூச்சு சிறிது திணற ஆரம்பித்தது. "பார்வதி! குழந்தை பத்திரம்! என் லோகநாயகியை உன்னிடம் ஒப்புவித்திருக்கிறேன்! பத்திரம்! பத்திரம்? சொன்னேன்! பத்திரம்!" என்று கடைசிவார்த்தைகளை மொழிந்துவிட்டு "தயாநிதே!" என்று ஒரு பெருமூச்சு † விட்டார். எழுபத்தியைந்து வருஷமாகப் பட்ட கஷ்டங்களின் களைப்பிளைப்பெல்லாம் அந்த ஒரு பெருமூச்சில் ஆறியமர்ந்து சாந்தியாய்விட்டது. அவர்விட்ட பெருமூச்சை "ரேசககும்பகம்" என்று யோகசாஸ்திரங்கள் சொல்லும். "தயாநிதே!" யென்றதோர்வாக்குத்தானே மந்திரமாகி, அந்த மந்திரமும் மஹாமந்திரத்தோடைக்கியமாகி, மஹாமந்திரம் அஜபாமந்திரமாகி, அசபையும் ஆனந்தமாகி, ஆனந்தம் சுபாவமாகி, சுபாவம் "அறுதி" யாம் அசிபத லக்ஷியார்த்தத்தில் ஒடுங்க, கிருஷ்ணஸ்வாமி ஐயர், ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்களிரண்டையும், கட்டின துணி களைவதுபோலவும், மலமுள்ள பாண்டத்தை நீக்குவதுபோலவும், சுலபமாய் விட்டொழித்துத் தமது காரண உபாதிகளான அவித்யை, மாயை, ஆனந்தம் மூன்றுக்கும் அபிமானியான 'பிரகிருதி சுபாவம்" என்னும் அவ்யக்தமும் தாண்டிய அக்ஷர லக்ஷணத்திற்குச் சாக்ஷியாகவுள்ள "அறுதி ஸ்தலத்தில்" தனது பாசபந்தங்களெல்லாம் அற்றுவிழ, சிற்றம்பல வீதி கடந்து "பொன்னம்பலத்துட் போனேன், போனேனே!" யென்று பங்குனி மாசம் உத்தர நக்ஷத்திரத்தில் பரமபத மடைந்து நின்றார்.

முன்னமே காட்டுவிண்ணார்கோவிலிலிருந்த மாப்பிள்ளை வாமதேவசாஸ்திரியவர்களுக்கும், கருவேலூர் முனிசீப்தாரான மூத்த மாப்பிள்ளை தண்டநாதய்யருக்கும், பள்ளியிற் படித்துக் கொண்டிருந்த கடைசி மாப்பிள்ளை வேங்கடநாதனுக்கும் மற்ற உறவு முறையார்களுக்கும் தந்தி கொடுத்திருந்ததால் அவர்களும் சமயத்துக்கு வந்து சேர்ந்தார்கள்.

கிருஷ்ணஸ்வாமி ஐயர் பரமபத மடைந்த ஒழுங்கு போலவே அவரது உத்தரக்கிரியைகளும் வெகு ஒழுங்காக நடத்தப்பட்டன. மூன்று மாப்பிள்ளைகளும் சம்பந்திகளில் ஒருவரும் தோளெடுக்க கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய தேஹம் ருத்திர பூமி யடைந்து

† 'பூரககும்பகரேசகம்' சேர்ந்தது பெருமூச்சு ஒன்றாம்.

அங்கே தனது புத்திரர்கள் வேதோக்த மந்திரம் சொல்லி அவர்கள் கையாலிட்ட ஔபாஸனாக்கினியினால் திரிமலந்தீரத்தஹிக்கப்பட்டு, ஸ்மசான வாசியான பரமசிவன் உத்தூளனமாய்த் தரிக்கும் விபூதி மாத்திரமாக மிஞ்சியது.

கிருஷ்ணஸ்வாமி ஐயர் ஜீவதசையிலே ப்ரஜ்ஞான ப்ரஹ்ம பதமடைந்து யஜுர்வேத மஹாவாக்கியமாகிய "அஹம்பிரஹ்மாஸ்மி" யென்கிற அற்புத லக்ஷியசித்தி பெற்றவராதலால் அவர் சரீரத்திரயங்களையும் ப்ரஜ்ஞான வசத்தாராகத்தானே விட்டொழித்தது அதிசயமில்லை. ஆனாலும் அர்தப்பதவி அபூர்வ சித்தி பெற்றவருக்கே கிடைக்குமாதலால், எல்லாரும் அவர் அநாயாஸமாய் "தயாநிதே!" யென்று பகவன் நாமத்தை ஸ்மரித்துக்கொண்டு அர்ச்சராதி மார்க்கத்தில் யோகஸாம்ராஜ்யராய்த் தன் பிராணனை விட்டதைப்பற்றி மிகவும் புகழ்ந்து கொண்டாடிக் கொண்டார்கள்.

அவருடைய உத்தரக்கிரியைகள் நடந்த பத்துநாளும் அவ்வூரில் அது ஒரு மஹோத்ஸவமாகக் கொண்டாடப்பட்டது.

கருவேலூர் முனிசிப்தார் தண்டநாதய்யர் எல்லாக் காரியங்களையும் தன் பொறுப்பா யெடுத்துப் போட்டுக்கொண்டு வெளியாடம்பரங்களில் ஒன்றும் குறைவு வாராது பார்த்துக்கொண்டார்.

காட்டுவிண்ணூர்கோவில் வாமதேவசாஸ்திரிகள் வைதீக கர்மங்களில் லோபமேற்படாமல் எல்லாவற்றையும் சாஸ்திரோக்தமாக நடத்தினர். பார்வதியம்மாள் தன் தாயாருடைய ஸ்தானத்தை வகித்தவளாய் சம்பிரதாய விஷயங்களில் யாதொரு குறைவும் நேரிடாதபடி யெல்லா வற்றையும் சரிவரப்பார்த்து நடத்திவந்தாள்.

வாலாம்பாள் அப்பாவுக்கு அழுதுகொண்டே யிருந்தாள். "குஞ்சு" தன் விளையாட்டுக்குக் குறைவு வராமல் வேங்கிடநாதன் வந்திருக்கிற புதுமையில் விளையாடிக்கொண்டே யிருந்தாள்.

பிள்ளைகள் மூன்றுபேர்களும் தங்கள் தர்மபத்நிகள் சஹிதமாய் கர்மலோபஞ் செய்யாமல், பிதுர்யஜ்ஞத்தை விமரிசையாகச் செய்துமுடித்து கிருதக்ஜ்ஞரானார்கள்.

கிருஷ்ணஸ்வாமிஐயர் தம்பி "ஸ்தர்அமீன்" என்று சொல்லும் பெரிய கோர்ட்டு ஜட்ஜாயிருந்த கணபதி அய்யர் 10-ம் நாள் வந்து சேர்ந்து தன் தமயனார் கைவல்ய முக்தி பெற்றவைபவத்தைக் கேட்டு அவர் துக்கமெல்லாம் மாறி ஆனந்த பரவசமானர். அவர் பெரிய ஜட்ஜ் உத்தியோகம் செய்த பெருமையைவிட அவருடைய தமயனார் யோகாரூடராய் விதேஹ கைவல்யம் பெற்ற வைபவப்பெருமை அவருக்கு உண்மையில் பெரிதாயிருந்தது.

பிராம்மணன் என்னதான் லௌகிக லோலனாயிருந்தாலும், யமனுக்கு முன்னால் அவன் லௌகிக மகிமையை யெல்லாம் துச்சமாய் எண்ணித்தானே தூர எறிந்து விட்டு, தன்னிடத்தில் வைதீகத் தன்மையில்லா விட்டாலும் தன் குலம் கோத்ரம் முன்னேர் பெரியோர்களுடைய வைதீகமகிமையைக் கண்டு பெருமை கொண்டாடாமலிரான்.

என்! ஹைக்கோர்ட்டு சிரேஷ்ட நியாயாதிபதியாயிருந்து நைட் பட்டம்பெற்ற திருவாரூர்முத்துஸ்வாமி ஐயருங்கூட அவருடைய அந்தியந்தாவஸ்தையில் அவருடைய உத்தியோகப் பெருமையை யெல்லாம் திரணமாயெண்ணி வைதிகாசாரமாயிருந்து பிராணனை விட்டாரல்லவா!

இந்தியர்களுக்கும் ஐரோப்பியர்களுக்கு முள்ள வித்தியாஸமெல்லாம் இதில் தானிருக்கிறது. வாவரக் காலம் மாறிவருகிறதானாலும் வைதிகதர்மம் ஸநாதநமானதால் அதற்கு யாதொரு குறைவும் வாராதென்பதே நிச்சயம். கெடுகிறவர்கள் கெட்டால் படுகிறவன் தானே படுகிறான். கர்ம விதியை லஞ்சங்கொடுத்து ஏமாற்ற முடியாது—வினைப்பயன் யாரையும் விடாது. இக்காலத்தவர்கள் வைதிக தர்மத்தை விட்டு ஸநாதனமான ஆத்ம லாபத்தை யிழந்து அற்பக்கியாதிக் காசைப்பட்டுப் பாகற்காய்க்குப் பங்கை விற்றவன் மாதிரி நிலையில்லாத இகசுகத்துக்காகப் பரசுகத்தை யிழந்து பரிதவித்து நிற்பாரானல், அது அவர்களுடைய பாடு. அதனால் ஸநாதனமான தர்மத்துக்கு யாதொரு குறைவும் வராது என்பது பெரியோர் துணிபு.—யதார்த்தமும் இதுவேயாம்.

## "Tell me Your Friends and I will tell you what You are."

## ஸகவாஸதோஷம்.

——(o)——

"சகவாஸதோஷம்" என்பது மிகவும் கொடியது. இது விஷம்போல் பற்றும். பற்றினால் இலகுவில் விடாது. "தொட்டிற் பழக்கம் சுடுகாடுமட்டும்" என்கிற பழமொழி மிகவும் உண்மையானதே. ஆகையால் பெற்றோர்கள் தம்மக்கள் முன்னுக்கு வரும் பொருட்டும், தம்மக்களால், தேசம் முன்னுக்கு வரும்பொருட்டும் அவர்களுடைய பால்ய சிநேகத்தை யறிந்து கோது நீக்கிக் குணத்தை யறிந்து விர்த்தி செய்யவேண்டும். கூடா வொழுக்கம் கேடாய் விளையும். ஆகையால் இது விஷயத்தில் "பெற்றோர் ஒழுக்கம்" * என்கிற ஒரு அருமையான தமிழ் கிரந்தம் இயற்றிய ஆசிரியர், நம்மிடம் வந்து அவரது நன்மொழி பரவவேண்டி, தக்க விஷயங்களைத் திரட்டி, விவேகசிந்தாமணியில் அச்சிட்டு வரவேண்டுமென்று கேட்டுக்கொண்டதற்கிணங்க, காபிரைட் ரிஜிஸ்தரான அவரது புஸ்தகத்தி லிருந்து பின்வரும் பாகத்தை யெடுத்து அச்சிடுகிறோம். கிரந்தகர்த்தாவினுடைய எழுத்து மூலமான அனுமதியின்றி இதை வேறு யாரும் எடுத்து மறுபடியும் அச்சிடக் கூடாதென்று எச்சரிக்கச் சொன்னார். விஷயங்களைத் திருடிப் பிழைக்கிறவர்கள் அவர்கள் திருட்டுத் தொழிலை இவரிடம் காட்டாதிருக்கவேண்டி இவ்வெச்சரிக்கை அவசியமென்றே நாமும் நினைக்கிறோம். யோக்கியர்கள் தாமாகவே இது செய்யமாட்டார்கள். அந்நியர் பொருளை யபகரித்து திருட்டுத் தனமாக தனதல்லாதவற்றைத் தனதுபோல் காட்டி வியாஸங்களும், விஷயங்களும், புஸ்தகங்களும் எழுதி, தப்பிலி வியாபாரம் செய்யும் அயோக்கியர்களைக் கொண்டு உண்மையான கிரந்தகர்த்தாவையும் வாங்கிவாசிப்போரையும் ஏமாற்றிப் போலிப்பேர் பெற்றுப் பிழைக்கும் சில தப்பிலிகள் தமிழ்வித்தையைச் சீர்குலைத்துச் சிரிப்பாணிசெய்யத் தலைக்கிளம்பி யிருக்கிறார்களாதலால் அவர்கள் அக்கிரமம் வெளியாகவேண்டி இவ்வெச்சரிக்கையை இவ்வளவு தூரம் வற்புறுத்திக் கூறலானோம்.

பெற்றோர், தமது மக்களுடைய தோழர்கள் விஷயத்திலே, கொள்ளவேண்டிய கவனத்தைப்பற்றி, "பெற்றோர் ஒழுக்கம்" இயற்றிய நூலாசிரியர் பின்வருமாறு 6-வது அதிகாரத்தில் விவரமாய்க் கண்டு எழுதுகிறார்:—

### மக்கள் தோழமை.

1. "மக்கள் தோழமை மட்டில் பெற்றோருக்குள்ள கவலையீனம்.—பல பெற்றோர், தங்கள் பிள்ளைகள் அவர்களுக்கு இஷ்டமானவர்களோடு கூடிச் சிநேகஞ்செய்வதைச் சற்றும் கவனியாமல், அது தங்கள் கடமை யல்லவென்றெண்ணியோ, அல்லது அஜாக்கிரதையினாலோ, அசட்டையாய், இருந்துவிடுகிறார்கள். பலர், தம்மக்களைக் கட்டு திட்டம் செய்தபோதிலும், அதனை முற்றும் கவனியாமல், தங்கள் இதர வேலைகளில் மூழ்கினவராய், மக்கள் மனம்போல் விட்டு விடுகிறார்கள். சிலர் வாய்ச்சொல்லால் மாத்திரஞ் சொல்லிக் கூவிக் குரைத்த போதிலும், மக்கள் தஞ்சொல்லைக் கடந்ததற்காகத் தண்டிக்காமல் விடுகிறார்கள். இதனால், மக்கள் பெற்றோரை அலட்சியஞ் செய்து, தங்கள் இஷ்டப்படி நடக்கத்திடன் கொள்கிறார்கள். ஆதலால், இவை பெற்றோருடைய சொந்தத் தப்பிதமாகி, மக்களைக் கெடுத்து விடுகின்றன.

2. தோழமைப் பயன்.— மக்களது தோழமை நல்லதானால் மாத்திரம் நன்மையுண்டாகுமே தவிரக்

---

* மக்கள் சன்மார்க்க வளர்ப்புக்குறிய "பெற்றோர் ஒழுக்கம்"—விலை ரூபா 1. தபாற்செலவு பிரத்தியேகம். மைலாப்பூர் லளிதாலயத்திலுள்ள இந்த ஆபீஸில் கிடைக்கும். வேண்டுவோர் முன்பண மனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம்.

கெட்டதானால் கெடுதிதான் உண்டாகும் நல்லவன் என்கிற பெயர் படைக்க அதிக காலஞ் சொல்லக், கெட்டவன் என்று ஒரே நாளிலும் பேரெடுக்கலாம் என்பது போல், நல்ல தோழமையின் பயன் சீக்கிரமாய் வெளிப்படாமல், பனி போல மெதுவாகவும், காணப்படாமலும் பலன் தரக், கெட்ட தோழமையின் பயன் தீயைப்போலத் தீவிரமாகவும், கொடுமையாகவும், பிரத்தியக்ஷமாகவும் பலன் அளிக்கும். ஒருவனுடைய துஷ்டத் தோழமையின் பயன் இவ்வாறு துரிதமாய் வெளிப்படப், பெற்றோர் கலங்கித் தயங்கிப் பரிதபித்து, "ஐயோ! இது வரையிலும் எவ்வளவோ நல்லவனாக இருந்த எனது மைந்தன், இப்பொழுது ஏனோ, எப்படியோ கெட்டவனாக மாறிவிட்டான்! அவனிடத்தில் இப்பொழுது கெட்ட குணங்களும், துஷ்டச்செயல்களும், சொற்களும், நூதனமாய் உதித்திருக்கின்றனவே! இதனை என்னென்று சொல்லுவேன்? ஐயோ, தெய்வமே! நல்ல குமாரனை நான் கொண்டிருந்தது உன் கண்ணுக்குப் பொறுக்கக்கூடாததாயிற்றோ? ஏன் இவனைக் கெட்டவன் ஆக்கிவிட்டாய்? இதுவும் உன் செயலோ, சித்தமோ? அல்லது, அவன் தலை விதியோ? என் கெட்டகாலமோ? ஒன்றும் அறியேன்!" என்று பிரலாபித்துக் கடவுள் பேரிலும், விதியின் பேரிலும், காலத்தின் பேரிலும், குற்றஞ் சாட்டுவாரே யன்றித், தமது அறிவீனமும், அசட்டையுமாகிய குற்றத்தைப் பெரும்பாலும் உணரமாட்டார்கள்.

3. மக்கள் தங்கள் அமைப்பின் படியே யாதும்படி விட்டுவிட . லாகாதேனல்—தங்கள் மக்களை நல்ல பிள்ளைகளோடு சேர்த்து, அவர்களுடைய சிநேகத்தை யிவர்கள் கைப்பற்றச் செய்யவேண்டியது மாத்திரமன்றிக் கெட்ட தோழருடன் சேராமலிருக்கவும் கவனிக்கவேண்டிய கடமையுள்ள பெற்றோர், மக்கள் தங்கள் அமைப்பின்படி நல்லவர்களையோ, கெட்டவர்களையோ சேர்ந்து, நல்லவர்களாகவோ, கெட்டவர்களாகவோ ஆகட்டும் என விட்டுக் கவலையின்றி யிருப்பது மதியீனமல்லவா? மக்களைத் தனியாக விடாமல், பெற்றோர் இருவரையும் அவர் தோழமைக்குக் காவலாகவைத்த ஜகதீசன் "நீங்கள் ஏன் உங்கள் மக்களை கவனியாமல் கெட்டவர்கள் ஆக்கி விட்டீர்கள்" என்று கேட்கும் காலத்தில் இவர்கள் என்ன மாறுத்தரஞ் சொல்லப்போகிறார்களோ? அது அவருக்கே வெளிச்சம்..... ......இவை மக்கள் அமைப்பு மல்ல, கடவுள் செயலுமல்ல, ஆனால் பெற்றோர் செயலேயாம். காரியம் இப்படியிருக்க, இது விஷயத்தைப் பெற்றோர் கவனியாமல் மக்கள் அமைப்பின்படியாகட்டு மென்று விட்டுவிட்டால், மக்கள் கெட்டதோழரோடு கூடாமற் போவார்களா? அவர்களுக்கு நல்ல அமைப்பு வருமா? சற்று யோசித்துப் பாருங்கள்? இது பெற்றோருடைய குற்றமா? மக்கள் குற்றமா! அல்லது கடவுள் குற்றமா? யாருடைய குற்றம் என்று நீங்களே சொல்லக் கடவீர்கள்.

4. மக்கள் தோழமைமட்டில் கொள்ளவேண்டிய கவனம் ஈதேனல்—மக்கள் பேச வாரம்பித்ததுமுதல், அவர்கள் தோழமை விஷயத்தைப் பெற்றோர் கவனித்து வரவேண்டிய கடமை யுடையவராதலால், சிறுவயதுமுதல் மக்கள் கெட்ட பிள்ளையோடு சேராமலும், நல்ல பிள்ளைகளுடன் கூடியும், அல்லது அவசியமானால், தனிமையாகவும் விளையாடவிட்டு அத்தருணத்தில் தாங்கள் அருகிலிருந்து கவனித்துத் துட்ட மொழிகளும், கெட்ட குணத்தைக் காட்டும், மட்டிச் சொற்களும் குட்டிக் குழைந்தைகள் காதில் விழாமற் கெடுத்து, அவை தவறி விழுமானால் பரிகரித்து, நல்லவர்கள் கெட்டவர்கள் என்றில்லாமல் எல்லாருடனும் தாங்கள் சிநேகம் வைத்துக்கொள்ளாமலும், எல்லாரும் தங்கள் வீட்டுக்கு வாராமலும் கவனங் கொண்டு கெட்டவர், பந்துக்களானாலும் வாராமல் தடுத்து, எவரானாலும் நல்லவரையே அடுத்து, தாம் வீண் விஷயங்களையும், பிறனுடைய சமாசாரங்களையும், விசேஷமாய் அவர் குற்றங்களையும் கடவுளுக்கும் பெரியோருக்கும் விரோதமான விஷயங்களையும் ஒரு காலமும் மக்களுக்குஎதிரில் பேசாமலும், தம் வீட்டுக்குவரும் அன்னியரும் பேச வொட்டாமலும் கவனித்துப் பிறர் அவ்வாறு பேசும் இடங்களினின்று மக்களையப்புறப்படுத்திக், கெட்ட புத்தகங்கள் துட்டப் பாட்டுகள் மக்கள் கைக்கு எட்டாமல் தடுத்து, மக்களோடு வெளியே போகும் போது வழியில் சம்பவிக்கும் துர்மாதிரிகளி னின்று காத்து, தோழமை விஷயத்திற்கடுத்த நல்ல கதைகளைச் சொல்லி, நல்லறிவு போதித்துப் பள்ளிக்கூடம் தொடங்கும் நேரத்திற்கு அதிக முன்னதாக மக்களை ஒருக்காலும் அனுப்பாமலும், பள்ளிக்கூடங் கலைந்ததும் உடனே நேரே வீட்டுக்கு வரவும் கவனித்து, அவர்கள் தோழர்களை அடிக்கடி சோதித்துக், கெட்டவர்களை நீங்கி, நல்லவர்களுக்குப் புத்திமதி புகட்

டித் தமது மக்கள் போல் பாவித்துச் சிநேகித்து, கெட்ட தோழர் சிநேகத்தை விட்டுப் பிரிய, மக்களுக்குக் கட்டு திட்டம் செய்வது, தக்க கண்டனை தண்டனைகளால் மக்கள் அப்படிச்செய்யக் கவனித்து, உபாத்தியாயரையும் இவ்விஷயத்தில் கவனிக்கக் கேட்டுக் கொண்டு, கெட்ட தோழமைக்குக் காரணமும், ஆதாரமு மாகிய மக்கள் கைக்காசை ஒடுக்கி அடக்கி, மக்கள் தோழமையை நல்லதாக்க வேண்டியது பெற்றோர் அவசியச்செயலேயாம்.

5. **மக்கள் விளையாட்டுத் தோழமை விஷயத்தில் பெற்றோர் கவனம் வேண்டுமெனல்.**—நல்ல தோழர்கள் இருக்கும் இடங்களில், மக்கள் அவர்களோடு வெளியே போய் விளையாட விடலாம் என்றாலும், கெட்ட பிள்ளைகள் இருக்கும் வீதியிலும், அவர்கள் வந்து இவர்களுக்குத் தொந்தரவு செய்யும் இடத்திலும், இவர்களோடு விளையாட வரும் பட்சத்திலும், இது தகாது. இதனால், நல்ல தோழர்கள் இல்லாத விடத்தில் பரிச்சேதம் மக்கள் வெளியே போக விடலாகாது என்று தெளிவாய் விளங்குகிறது. சிறுவயதில் சகோதரர் சகோதரிகளோடு கூடியும், வெளியே போகாமலும் வீட்டிக்குள்ளேயே விளையாடப் பணிக்க வேண்டும். ஆனால், முன் கூறியுள்ள படியே, பள்ளிப் பருவத்தில், ஆண்மக்கள் பெண்மக்கள் இரு பாலாருங் கலந்து விளையாட விடலாகாது எனப் பொது விதி யிருந்த போதிலும், அவர்கள் வயது, குணம், நடத்தை முதலியவற்றை நன்கு அறிந்த பெற்றோர், இது குற்றம் என்றும், குற்றம்அல்லவென்றும் தீர்க்கக் கடவார்கள். அன்றியும், மக்கள் விளையாடும் போது, பெற்றோராவது, அல்லது பெற்றோரால் நியமிக்கப்பட்ட பெரியவராவது அவர்களைக் கவனிப்பது அவசியமும் நன்மையுமாக விருக்கிறது. இதனால், பெற்றோர் மக்கள் தங்களுக்குள் சண்டை யிடாமலும், குற்றமில்லாமலும் விளையாடக் காரணமா யிருப்பது மன்றி, அவர்கள் தப்பிதங்களை அப்போதைக் கப்போது எடுத்துக் காட்டவும், பிறருக்கு வருத்த முண்டாகாமல் விளையாடச் செய்யவும் கூடும். சிறுபிள்ளைகள் தாமே யென்றெண்ணி அவர்களை வெளியே தனியாய்ப் போகவும், விளையாடவும், கெட்ட பிள்ளைகளோடு நிற்கவும் முதலாய் விடலாகாது.

6. **மக்கள் காதில் விழுந்த கெட்ட சொற்களைப் பரிகரிக்கும் வகை.**—கெட்ட வார்த்தைகள் பிள்ளைகள் காதில் விழுந்தன என்று அறிந்த க்ஷணமே, பெற்றோர், 'ஐயையோ! ஐயையோ! கெட்ட வார்த்தைகள்!" என்று மக்களறிய வுரத்துச் சொல்லி அவற்றின்மேல் அருவருப்பைக்காட்டி, அவசியமானால் காது இரண்டையும் கைகளால் அடைத்துக் காட்டவும், அல்லது கடவுள் திருநாமத்தைப் பிள்ளைகள் கேட்கும்படி அடிக்கடிக் யுச்சரித்துக் கூடிய விரைவாக அவ்விடத்தை விட்டு நீங்கவும் வேண்டும். மக்கள் பெற்றோரை "யேன் இப்படிச் செய்கிறீர்கள்"? என்று கேட்டால், "கெட்ட சொற்களை காதால்கேட்பது பாவமானதால் இவ்வாறு செய்கிறோம்" என்று சொல்லவேண்டும். இவைகளுக்குப்பெற்றோர் பயந்தால் தான், பிள்ளைகளும் பயப்படுவார்கள். சில பெற்றோர் தங்கள் சமயோசித தந்திர புத்தியால், அவ்வேளைகளில், அவை மக்கள்காதில் விழாதிருக்கும்படி, அல்லது மக்கள் அவற்றைக் கவனிக்காதபடி ஏதோ ஒரு சந்தடி செய்வதும், உரத்துப் பேசுவதும், மக்களை அல்லது பிறரை அழைப்பதும், இவ்வாறு தடுப்பதும் உண்டு.

7. **சிநேகஞ் செய்யும் முறை.**—எவரையும் முதல் தரம் பார்த்த வுடனே, அவர்களோடு முகமலர்ந்து, சிரித்துப் பேசிக், கண்டவுடன் கொண்டுவிடும் கத்திரிக்காய்போல், அவர்களைச் சிநேகர் ஆக்கிக்கொள்ளுவது அநேகர் வழக்கம். இது தப்பிதம். ஏனெனில், தொழில், உடுபாவனை, முக லட்சணம், முதலியவற்றால் மனிதருடைய குணம் இவ்வாறு இருக்கலாம் என ஒரு வகையாய் யூகித்துக் கொள்ளலாம் என்பாராயினும், இது பெரும்பாலும் தவறி விடுவதால், இவ்விஷயத்தில் ஆத்திரப்படாமல், அவர்களுடைய சொல், தோழமை, செயல் முதலியவற்றை அடிக்கடி கவனித்தால், அவை அவர்கள் நல்லவர்கள், கெட்டவர்கள் என்றும், அவர்கள் குணம் இன்ன தன்மையதென்றும் சொல்லிவிடும். அவ்வாறு அவர்கள் குணங்களை அறிந்துகொண்ட பின்பு, சிநேகஞ் செய்யத்தகுமானால் செய்யவும், தகாவிடில், விடுக்கவும் வேண்டும். பின்னும அச்சிநேகத்தைச் சோதித்துத், தவறான குணம் ஏதாவது காணப்பட்டால், அதை உடனே நேரில் சொல்லித் திருத்த வருந்தவேண்டும். அப்படியும் திருந்தாமல் போனால், இதைப் பற்றிச் சிநேகம் கெடநேரிடும்என்று எச்சரிக்கவேண்டும். பின்னும், அசட்டையா யிருந்தால், முற்றும் விட்டு நீங்க வேண்டும் என்பதாக மக்களுக்குப் போதிக்க வேண்டும். சிலர், தமது சிநேகரிடத்தில் ஏதாவது குற்றங் கண்டால் அதை அவர்களுக்கு அறிவிக்காமலே, அவர்கள் தோழமையைத் தேடாமலும், அவர்களே வலிய வந்து பேசினாலும், நன்றாய் முகங் கொடுத்துப் பேசாமலும், தங்கள் வேலையைக் கவனிப்பதுண்டு. இது, துஷ்டர்களிடத்தில் நடந்துகொள்ள வேண்டிய ஒழுங்கு. ஆனால், கூடிய வரைக்கும் சன்மார்க்கத்தில் நடக்க முயலுகிறவர்களிடமது இவ்வாறு செய்வது திருந்தக் கூடியவர்களையும், திருத்தாமல் விடுவதாகும். அன்றியும், தங்களைப் பற்றி அவர்களுக்குக் கெட்ட அபிப்பிராயம் உண்டாக்குவதாகும். ஆதலால், நல்ல மனிதரைத் தேடிச் சிநேகஞ் செய்ய முயல வேண்டும்.

8. **துஷ்டமனிதர் வீட்டுக்கு அடிக்கடி வராமல் தடுக்கும் முறை.**—துஷ்ட மனிதரும், கெட்ட ஸ்திரீ

களும், இஷ்டப்படி திரியும் மட்டிப் பிள்ளைகளும் தமது வீட்டிக்கு உறவாட அடிக்கடி வருவார்களானால், பெற்றோர், அவர்கள் வருகையால், மக்கள் கெடாதபடி, அவர்களை நோக்கி "யெம் வீட்டுக்குத் துஷ்டராகிய நீங்கள் எல்லாம் வரவேண்டாம்" என்று முரட்டுத் தனமாகச் சொல்ல லாகாது. ஏனெனில், இதனால், கெட்டவர்களாகிய அவர்கள், பகை, வர்மம் கொண்டு, இவர்களுக்குப் பெருந் தீமைகளைச் செய்வதும் உண்டு என்பதனால் தான். துஷ்டரானவர் எவ்வளவு நெருங்கிய பந்துவாக இருந்தாலும், தம் வீட்டுக்கு வந்த விடத்துப், பெற்றோர், அவர்களைச் சற்றும் சட்டை பண்ணாமலும், நரகலைப் பார்க்கும் கண்ணாலும் அவர்களைப் பாராமலும், அவரிடத்து ஒரு வார்த்தை முதலாகப் பேசாமலும், முற்றும் மௌனமும், அசட்டையுமாய்ப், பகைவரைக் கண்டவர்கள் போல், இருந்துவிட வேண்டும். அவர்கள் தாமாகவே வலியப் பேசினாலும், அவர்கள் முகத்தைப் பாராமல், தமது வேலையையே கவனித்துக் கொண்டு, அவசியமான விஷயத்தை அதி சுருக்கமாக இரண்டொரு வார்த்தையில் அடக்கிச் சொல்லித் தீர்க்கவேண்டும். இப்படிச் செய்தால், அவர்கள் என் திரும்பவும் அவ்வீட்டுக்கு வருவார்கள்? பார்வையானது சிநேககாரணங்களில் ஒன்றாகிச், சிநேகத்தை வளர்க்கவும், உறுதிப்படுத்தவும், வாக்கின் காரணமாகவும் உபயோகிக்கப் படுவதாகையால், பார்வையும், அநாவசியமான ஒரு வார்த்தை, அநேக வார்த்தைகளுக்குக் காரணமாகவும், அதனால் ஒன்றில் சிநேகமோ, அல்லது பகையோ, உண்டாகவும் நேரிடுமாதலால், வாக்கையும் தவிர்க்கும்படிக் கூறப்பட்டது. அப்படி அனுப்பப் பட்டவர்கள், பெரும்பாலும், பின்னால், முதுகுக்குப் பிறகே, பலவகையாய்ப் பிதற்றுவது சகஜம். அதனால் நமக்கு ஒன்றும் சேதமாவதில்லை- நாய் குரைத்து நத்தம் பாழாகுமா? இஃதன்றிச், சில கெட்ட ஸ்திரீகள், எதிரிலேயே, 'என்னடி கெடுவாய்! உனக்குப் புதுவாழ்வு வந்துவிட்டதோ? என்னடி! முகத்தைப்பார்த்துப் பேசவும் முடியாமற் போயிற்றோ? கண்ணிலுந் தொண்டையிலுங் கொழுப்பு அடைத்துக்கொண் டிருக்கின்றதோ?" என இப்படிப் பலவிதமாகவும் பேசுவார்கள். இதனை, யேதோ நாய் குரைக்கிறது, கழுதை கத்துகிறது, என்றெண்ணி முற்றும் மௌனங்காக்க வேண்டும். தவறி வாய்த் திறந்தாலோ, கெட்டது சகலமும். அவர்கள் அப்புறம் போனபிறகு, பிள்ளைகளிடத்தில் "மக்காள்! அவர்கள் மகா துஷ்டர்கள். ஆனதினால்தான், அவ்வாறு கெட்டகெட்ட வார்த்தைகள் எல்லாம் பேசினார்கள் அதினாலேயே, நான் அவர்களிடத்தில் பேசவில்லை. "அரசன் அன்றறுப்பான், தெய்வம் நின்றறுக்கும்" என்றபடி அவர்கள் பேசிய அத்தனை துஷ்டவார்த்தைகளுக்கும், கடவுள் உடனே தண்டியாமல், 'ஒருகாலத்தில் தங்கள் குற்றங்களை உணருவார்கள்' என்று எவ்வளவு பொறுமையாகவும், தயவாகவும், இருக்கின்றார்! பார்த்தீர்களா? வல்லபமுள்ள ஈசனுடைய தயவும், பொறுமையும் எவ்வளவுபெரிது!" என்று சொல்லி, அதனால் மக்களுக்கு உண்டாகிய துன்மைகளை ஒருவாறு பரிகரித்துக் கொள்ளலாம். இது மக்களுக்கு ஒரு நல்ல படிப்பினையாகும்; பிறர் தம்மை யெவ்வளவு பேசினாலும், ஏசினாலும் ஒரு வார்த்தையும் பேசாமல் மகா பொறுமையாய் மௌனத்தை யநுசரிக்கக் கற்றுக் கொள்ளுவார்கள்.

9. மக்கள் முன் தகாத பேச்சுகளைப் பேசுவதும் பிறர் பேச விடுவதும் ஆகாதெனல்.—அநேக பெற்றோரிடத்தில் உள்ள இன்னொரு பெருங் குறை மக்கள் முன்னிலையில் தாங்கள் தங்களுக்குள்ளும், பிறரிடத்தும், பிறர் தங்களிடத்தும், அவர்களுக் குள்ளும், வேதம், நல்லொழுக்கம் இவற்றிற்கும், கடவுள், பெரியோர், குருக்கள், நல்லோர், பக்திமான்கள், இவர்களுக்கும் விரோதமாக அநேக விஷயங்களைப் பேசுவதும், தர்க்கிப்பதும், விரோதிப்பதும், பிறர் பேசவும், தர்க்கிக்கவும்! விரோதிக்கவும் விடுவது மாம். இதுவும் ஒரு பெரும் பாதகமாமே. ஏனெனில், இது மக்களுக்குத் துர்மாதிரி யாகிக், கோபம், பகை நிந்தனை முதலிய குணங்களையும், அக்குணங்களுக்கு அடுத்த குற்றமான சொற்களையும், பேச்சுகளையும், சைக்கினைகளையும், மக்கள் அடிக்கடி கேட்டுக் கண்டு பழகி, அவற்றைக் கற்றுத் துஷ்டராகிறார்கள். ஒரு விஷயம் நல்லதானால் என்ன, கெட்டதானால் என்ன? எவர் எப்படி நடந்தால் தான் நமக் கென்ன? நாம் மாத்திரம் நல்லவர்வளாயிருந்து, நன்று என்று கண்ட விஷயத்தைப் பின்பற்றி, மனம் சாக்ஷியா யிருக்கக் குற்றமானவைகளை விலக்கி நடவாமலும், இவ்வாறு மக்கள் முன்னிலையில் பேச வரும்பிறருக்கும் போதிக்காமலும், தர்க்கிக்கஇஷ்டப்பட்டவர், அதற்கடுத்த இடங்களுக்குப் போய்த் தர்க்கஞ்செய்ய ஏவாமலும், பெற்றோர் நாள்சாய்ந்த தாங்கள் கெடுவது மன்றி, நாள்போக வாழ விருக்கும் சின்னஞ் சிறியதுகளையும் கெடுத்துத், தோஷத்தை வீணாகக் கட்டிக் கொள்ளுகிறார்கள். இவ்விதமான பெற்றோர் கடவுளுடைய கோபத்திற்குஞ் சாபத்திற்கும் தப்புவது அரிது. அன்றியும், பலர் பிறருடைய குற்றங்களை யெடுத்துப் பழிப்பாகப் பேசுவதிலே அதிக விருப்பங் கொண்டவராய், "ஊர்ப்பேச்சு என்னும் ஊன்று கோல் இல்லாமல், வாய்ப் பேச்சு என்னும் வழி மாளாது" போல எந்நேரமும், ஊர்ப் பேச்சு பேசுவதில் ஊக்கங் கொண்டு உழைத்துப், பழிபாவஞ் சுமந்து, மக்கள் தலையிலும் அச்சுமையை வைக்க முயலுகிறார்கள்."

## COCOANUT PALM PESTS.

## தென்னைமரத்து வண்டுகள்.

——:-:——

இரண்டு தினுசு வண்டுகள் தென்னை மரங்களையும் மற்ற பனை தினுசுகளையும் பீடித்து அச்செடிகளுக்கு மிக நஷ்டத்தை யுண்டாக்குகிறது. அவைகளில் ஒன்று தமிழில் தென்னம் வண்டென்றும், மலையாளத்தில் செள்ளுவென்றும் பெயர். தலையில் ஒரு கொம்பையுடைய கருப்பு வர்ணமுள்ள ஒரு ஜாதி வண்டு. இது குருத்து ஓலைகளையும் மரத்தின் தலையிலுள்ள மட்டைகளையும் துளைத்து நாசமாக்கும். இளம் தென்னை மரங்களை இவ்வண்டுகள் துளைத்து ஜாஸ்தி நாசமாக்குவதைப்போல் முற்றின் மரங்களை கெடுப்பதில்லை. இவைகள் செத்துப்போன அடிமரங்களிலாவது எருக்குழிகளிலாவது முட்டைகளிட்டு அவைகளிலிருந்து வெளிவந்து, அழுகும் வஸ்துக்களை தின்று பெரிதாகி நாளாவட்டத்தில் வண்டாய் உருமாறுகிறது.

தமிழில் செவ்வண்டென்று சொல்லப்படுவது முன்சொன்ன கருப்புவண்டைவிடச்சின்னது. இதை அதினுடைய நீண்ட வளைவுள்ள மூக்கால் கண்டறிந்து கொள்ளலாம். இது பனைகளில் உச்சிகளில் சாதாரணமாய் தென்னம் வண்டாலாவது பனைமரம் ஏறுகிறவர்களாலாவது செய்த காயங்கள்பட்ட இடங்களில் முட்டைகள் வைக்கும். இதிலிருந்து வெளிப்படும் புழுக்கள் உச்சி மரத்தைத் துளைத்து செடிகளைக்கொன்று விடும். இப்புழுக்கள் நார் இழைகளைக்கொண்டு ஒரு கூடுகட்டி அதில் ஸ்தம்பித்திருந்து சுமார் இரண்டு வாரங்களில் உருமாறி வண்டுகளாகிறது.

இவைகளின் கெடுதிகளை நிவர்த்திக்குமார்க்கம்.

1. தென்னம் வண்டு ஜாஸ்தி கெடுதி செடிகளுக்கு செய்யா விட்டாலும, செவ்வண்டினால் உண்டாகும் நஷ்டத்துக்கு காரண பூதமாயிருக்கிறது. இந்த தென்னம் வண்டை அனேக இடங்களில் தற்காலம் மரங்களிலிருந்து எடுப்பதைப்போல் வெகு சுலபமாய் ஒரு வண்டெடுக்கும் இருப்பு முள் ஊசிகொண்டு எடுத்து விடலாம்.

2. இவ்வண்டுகளை அப்புறப்படுத்திப் பின் அவைகள் துளைத்திருக்கும் துளைகளைத் தாரினால் தடவி மண்கொண்டு மூடிவிடுவதுடன், பனையேறிகள் மரங்களில் செய்திருக்கும் காயங்களிலும் மேல் சொன்ன தாரைத் தடவவேண்டும். இப்படிச் செய்யாவிட்டால் செவ்வண்டுகள் மரங்களிலிருக்கும் காயங்களில் முட்டைவைத்து நாசமாக்கிவிடும். இவ்வண்டுகள் முட்டை வைத்தபின் மரங்களை இவைகளின் பாதையிலிருந்து சுலபமாய் நிவர்த்திக்க முடியாது.

3. பொடிமணலும் உப்பும் சமபாகம் கலந்து ஒரு வருஷத்திற்கு இரண்டு தடவை மரங்களின் உச்சியில் மட்டைகளுக் கிடையே கொஞ்சம் போடலாம். இதனால் தென்னம் வண்டைத் துரத்திவிட ஏதுவுண்டு.

4. செவ்வண்டினால் பீடிக்கப்பட்ட மரங்கள் திரும்பவும் பிழைக்கமாட்டா ஆகையால் அவைகளைத் தாமதமின்றி வெட்டிவிட வேண்டும். இந்த புழுக்களோடு இந்த மரத்தின் உச்சியை நிர்மூலமாக்கிவிட வேண்டும். இல்லாவிட்டால், இதிலிருக்கும் புழுக்கள் பின்னால் வண்டுகளாகமாறி புது மரங்களை நாசமாக்கும்.

5. ஒரு தோப்பில் செத்துப்போன மரங்களை அப்போதைக்கப்போது வெட்டிக், கீறியுடைத்து காயப்போட வேண்டும். அப்படிக்கில்லாமல் அவைகளை அழுகவிடவே கூடாது. ஏனென்றால் அழுகும் பதார்த்தங்களிலும் இடங்களிலும் தென்னம்வண்டு பல்கிப் பெருகும். தோட்டத்துக்குள் எந்த விதமான வஸ்துவும் அழுகிக் குவிய இடங் கொடுக்கக்கூடாது.

6. சில இடங்களில் தென்னமரத்து செவ்வண்டின் புழுக்கள் அடிமரத்திலிருந்து உள்ளே சென்று மரத்தைக் கெடுக்கிற தென்ற அபிப்பிராயமிருக்கிறது. ஆகையால் மேல் தரையிலிருந்து சில அடிகளுக்கு மேல் மரத்தை துளைக்கும் வழக்கமிருக்கிறது. இவ்வித அபிப்பிராயம் தப்பானது. மேல் சொன்ன பிரகாரம் மரங்களை துளைப்பது அதிர்ஷ்டத்தை யுண்டுபண்ண ஏதுவாகும். ஆகையால் அப்படி செய்யவேகூடாது.

மேல் சொன்ன இரண்டு வண்டுகளின் நகம் ஒன்றை ஒன்று பெருத்ததாயிருக்கிறது. தென்னம் வண்டு நன்றாயிருக்கும் உச்சி மரங்களில் துளைகளை யுண்டாக்கி செவ்வெண்டு அதில் வந்துசேர இடத்தை யுண்டாக்குகிறது. செவ்வண்டுகளினால் செத்துப்போன மரங்கள் தென்னம் வண்டுகள் பல்கிப் பெருக நல்ல வாசஸ்தானமாகிறது. ஆகையால் மேல் சொன்ன முன் ஜாக்கிரதையோடு கவனம் செலுத்தாவிட்டால், இவ்வண்டுகளால் பீடித்த தென்னந்தோப்பில் மரங்கள் நாளாவட்டத்தில் ஒன்றுக்கு பின் ஒன்றாய் நாசமாவதைத் தடுக்கமுடியாது.

—*Agricultural Bulletin.*

## REFLECTIONS OF A DYING MAN.

### HOLY CROSS.

[THE INDIAN PATRIOT OF FRIDAY 2nd JUNE 1911.]

I am dying! yes! literally and figuratively dying. I can see the ebb and flow of life. It increases now, and anon decreases. Every swing of the pendulum and every movement of the vital fluids bring it nearer and nearer to the fatal moment. In the days gone by when I was practising yoga, I have faced death with a pleasant expectation, at least with a buoyant spirit. While the body was at its lowest, my spirit was at its highest, and I scarcely felt the sinking powers of the body. When those around with anxious faces looked on me and enquired, I simply laughed at them and their fear of Death! "If you want this frail body to live on, go and pray for it; but don't whine over it making faces to me. It makes me so sick to see you all whine and whimper. Leave me alone to live or die as it comes to me!" That is how I have been addressing my people who showed a disposition to get frightened at the first or last symptom of illness. Death to me was always a pleasing transition! though the body often sank and withered until one could not recognise it. But this time it came to me with all its horrors! And I have to thank my doctor-friend for showing death to me in all its hideousness.

The sun was reaching the highest point in heaven and entering the House of Fire (Agni Nakshatram). I had gone out all day long and when entirely broken and tired heard of a case of small pox in a friend's house and involuntarily felt drawn towards the suffering child who was covered with small-pox from head to foot. To one who knows what Zymotic fever is; and what the symptoms of small-pox when it breaks out in a virulent form means, it need hardly be said that the weak and worn out state of body with the mind sympathetically attuned to a child suffering from virulent small-pox are conditions sufficient to create a fermentation of blood which would easily be converted into a Zymotic fever. Whether the medical fraternity will accept my theory or not, the fact remains that I vomited my food that night and immediately found myself caught in the whirpool of a raging fever which made the blood boil all over. It would have ended in heat apoplexy were it not timely arrested by letting the superfluous heat off by a device which suggested itself to meat the moment, and which later on I remembered was a good remedy for letting off superfluous heat or energy in the body. The earth has a peculiar power of drawing to itself all superfluous heat which is in excess of its own normal temperature, and similarly it imports its own heat to a body which falls far below its own normal temparature. This is an important secret which plays a good part in all cases of miraculous *Samadhi States* wherein the Yogin trusts himself to mother-earth for days and weeks letting himself be buried in earth and then coming out at the end of the appointed time when the body was exhumed, as if he had merely been a child sleeping on the lap of his mother.

The zymotic fever brought on an inflammation of the internal parts, which were already enfeebled and inflamed by excesive heat. For four days I managed to pull on without seeing the doctor. On the fifth day, moved to pity by the imploring look of my innocent little boy, I just called on the doctor to know what the matter was in his opinion.

He of course, felt the pulse and said there was fever and warned that there was danger ahead, and that I could not afford to neglect it. In a moment, which Fate or Destiny, call it what you will manages to usher in, on momentous occasions in the life of every one, when the unknown hand of Nature is working to secure a desired end, I surrendered myself to the Doctor, and was forthwith given six "powders" to swallow thrice a day. The first dose stirred up the devil in the blood, the second does sent me straight down to hell to suffer the scorchings of hell fire, while the third dose made me unconscious for the first time in my life for 11 years. The state of unconscious sleep, brought me however, some strength to the tortured nerves and I felt somewhat better after two hours' immersion in the cold bath tub. The Doctor-friend, opined I was better, and insisted on my swallowing the remaining three powders. I did it: and lo! found myself going through the process of crucifixion. Every nerve and cell in the body experienced the pain of being stretched on a cross and pinned therein to something which was as dead as the wood of the Holy Cross. Flesh and blood has become scorched up and nerve and bone can bear it no longer. I threw myself into the cold water tub once again and remained there for the greater part of the night. In the morning I complained of it all to the doctor who treated it nonchallantly and gave me some more new powders to swallow. I swallowed them all but found no relief. I have gone through all the tortures of hell and in my waking hours found the possession of a body an insufferable burden. I would have gone straight at it and rid myself of the same with the proverbial rope and halter but I know that it would be of no avail.

The pangs and pains will be all there, even after the poor body has been rudely and violently cast off. So I thought it useless to be angry with the body, which is but an illused instrument: but I wanted to have the dragon-like fiery spirit of the drugs work itself out, and I could not bear it, the bodily suffering was so great and it was so weak to bear it through and survive.

I calmed and quited myself as best I could and sumoned a friend whith whom I was well-attuned in mind. He came: I spoke to him the truth and asked him what does the Hindu Shastras prescribe as the best healer. He replied to it giving the only answer possible. Simple as the remedy was, I understood its vedic significance, as the chief article of sacrifice, and took it in due form. The burning of hell-fire in the body ceased in ten minutes and I felt an immense relief. Four doses of it, with due significance of all that it implied restored me to my normal state of consciousness and I worshipped my God (the Sri Guru) with a light heart on Friday evening and skipped and danced for joy untill I fell wearied in my limbs; I got up unhurt and made whole, and though the weakness of the internal organs still continues and many people feel anxious about me, I feel that death has no more terrors for me. I was dying, dying dying all yesternight; but it was so pleasant to cut oneself away from the scorched up body and let Nature play the healing physician to it, unhindered and unhampered by any counteracting influences. The seperation from the body was so complete, that I went through all the experiences of physical death.—only to find myself early morning, on returning to my body, to find it so improved as to do a full hour's work in proof correction and indite to you this record of my strange experiences. I have recorded my reflections as they occured to me and I leave it to others to draw what lesson or moral they choose from it.

"The Readers of your journal appreciate it very much as it contains matter calculated to raise the mental and moral tone."—*The Voice of Truth in the Republic of Letters.*

# The Viveka Chintamani

(The Oldest and The Best Tamil Monthly)

**The 19th Volume begins with April 1911**

IT CONTAINS EXCELLENT ARTICLES

DISCUSSING HIGH MORAL AND SPIRITUAL PRINCIPLES

*USEFUL IN EVERY DAY LIFE*

With Psychic Tales, Popular Stories, and Illuminative Studies in Social Life; A Critical Study and Exposition of Indian Traditions and A Lucid Translation of the Upanishads, and Yoga Sastras prescribing the Most Efficient Sadhanas for the understanding and realisation of the Great and Real Facts of Life.

Annual Subscription Rs. 4.] [Thick Paper Edition Rs. 5.



Overland 8 Annas extra.

SUBSCRIPTIONS REGISTERED BY VOLUME ONLY

And cannot be discontinued in the middle of a Volume.

Only a limited Number of Copies Printed: Apply early with remittance,
To The Secretary, D. K. Agency, Mylapore, Madras, S.

---

# KAMALAMBAL

## The Best and Foremost Novel in Tamil

BY B. R. RAJAM IYER

(Reprinted from the Viveka Chintamani and thoroughly revised.)

Price Re. 1-4. Postage Extra.

If you cannot get it from your book-seller apply direct to **The Lalita Publishing Co.,** Lalitalaya, Mylapore, Madras, S.

*N. B.*—Owing to the large number of petty adventurers in the book-trade the D. K. Agency to protect its interests, has been obliged to reorganise its publishing business by placing it under the care of the Lalita Publishing Co, who will allow good commission on large trade-orders, but no discount on purchase of single copies:

---

## The Life of Buddha



புத்தரது திவ்யசரித்திரம்.

Sir Edwin Arnold's Light of Asia in Tamil. Cloth Gilt 14 As.
Stitched Board. 8 As.

An Excellent Moral Class Book.

*Apply to the Lalita Publishing Co., Mylapore, Madras.*

---

## Gleanings on the Way from Earth to Heaven.

(*Original English Work on Mysticism with a Chart of Life.*).

Sold by Messrs: Luzac & Co., Oriental Book-Sellers, London, for 2s 6d.

Indian Price (Special offer) Rs. 1-10. by V. P. Post.

The Unity of Religion and the variety of Creeds, An English Essay. 6 As.

*POSTAGE EXTRA.*

Apply to the Lalita Publishing Co., Mylapore, Madras, S.

---

PRINTED AT THE SOUTH INDIAN PRESS 18- LINGHI CHETTY ST., G. T. MADRAS.